# திருமூலர் திருமந்திரம்

**(ஆனந்தக்கூத்து)**

**வித்வான் ல. சண்முகசுந்தரம்**

சண்முகர் பதிப்பகம்
163 அஊணக்கரைத் தெரு
தென்காசி திருநெல்வேலி மாவட்டம்

## முகவுரை

சுமார் முப்பத்தைந்து வருடங்களுக்குமுன், 'அற்புதரசம்' என்னும் கட்டுரை யைப் படிக்க நேர்ந்தது.

ரசிகமணி டி.கே.சியின் சொற்பொழிவு சிறிய புத்தகமாக வெளியிடப்பட்டிருந் தது. அதுவே அற்புத ரசம்.

உண்மையை அனுபவித்த மாத்திரத்தில் அதிசயம் உண்டாகிவிடுகிறது. அந்த அதிசய பாவம் வார்த்தைகளோடு வார்த்தைகளாய் தாளத்தில் நின்று தாண்டவம் அடுவதையே கவி என்கிறோம்.

கவி பற்றிய - கலை பற்றிய இந்த அற்புதத்தை விளக்கிக் காட்டுவதற்கு, ஏழெட்டுப் பாடல்களை உதாரணமாகத் தம் சொற்பொழிவில் டி. கே. சி எடுத்தாண்டா ர்கள். அதில் ஒரு பாட்டு.

"*யாரறி வார் எங்கள்*
*அண்ணல் பெருமையை*
*யாரறி வார்அந்த*
*அகலமும் நிகளமும்*
*பேரறி யாத*
*பெருஞ்சுடர் ஒன்றதின்*
*வேரறி யாமல்*
*விளம்பல்உற் றேனே*"

"பேராசிரியர் டிண்டால் என்பவர் ஒரு சமயம் ஆல்ப்ஸ் மலையின் உச்சியில் நின்று கீழே பார்த்தார். ஒரே மேகப் படலமாக இருந்தது.

நானும், இந்த உலகமும், ஏன், இந்தப் பிரபஞ்சம் மமுவதுமே, ஒரு காலத்தில் இப்படி மேகப்படலமாகத் தானே இருந்தோம் என்று அதிசயப்பட்டார்.

திருமூலருக்கு ஏற்பட்ட அதிசயமோ, பாடலாக, "யாரறிவார்" என்னும் பாடலாக வந்துவிட்டது."

ரசிகமணியினுடைய விளக்கத்தையும் பாட்டையும் மாறி மாறிப் படித்தேன். படிக்கப் படிக்க, அது, என்னென்னவோ செய்துவிட்டது என்னை.

அதுவரை நான் படித்தது அவ்வளவும், விளங்கிக் கொண்டதாக நினைத்தது அவ்வளவும் பொய்யென்பதும் விளங்கிவிட்டது.

சுத்த சைபர் நான் என்பதும், இனிமேல் தெரிகிறது தான் உண்மை என்பதும், உண்மையைத் தெரிய வழி பிறந்துவிட்டது என்றும் விளங்கிவிட்டது எனக்கு.

திருமூலர் திருமந்திரம் என்னும் புத்தகத்தை வாங்கினேன். புரட்டிப் புரட்டிப் பார்த்தேன். ஒன்றுமே விளங்கவில்லை.

அலமாரியிலுள்ள புத்தகங்களோடு புத்தகமாக திருமூலர் திருமந்திரமும் சேர்ந்து உட்கார்ந்து கொண்டது. புத்தகத்தோடு உறவு வைத்துக்கொள்ள முடியா விட்டாலும் “யாரறிவார்” என்னும் பாடலுக்கும் எனக்கும் ஏற்பட்ட சொந்தம் அறுபடவே இல்லை.

---- ---- ---- ---- ---- ---- ---- ---- ---- ---- ----

மேலே குறிப்பிட்ட சம்பவத்திற்கு இரண்டு வருடங்கள் கழித்து, என்னுடைய ஊருக்குப் 'பக்கத்தில் உள்ள என் நண்பரின் ஊருக்குப் போயிருந்தேன். அங்கிருந்த நூல் நிலையத்தில், ‘இதய ஒலி' என்னும் நூல் ஒன்றைப் பார்க்க நேர்ந்தது. அதுவும் டி.கே.சி எழுதியதுதான்.

‘சங்கீதமும் சாகித்யமும்' என்னும் தலைப்பில் ஒரு கட்டுரை இருந்தது. அதை நான் வளைத்து வளைத்துப் படித்தேன்.

இங்கிலீஷ் படிப்பிலுள்ள கோமாளித்தனந்தான், “விளங்கியது, விளங்காதது” எதற்குமே வித்தியாசம் தெரியாதபடி, நம்மவரைக் கலக்கிக் கொண்டிருக்கிறது என்பதை தெளிவுபடுத்துகிறார்கள் அந்தக் கட்டுரையில், டி. கே. சி.

ரசிகமணி சொல்கிறார்கள்!

“இத்தாலியர்கள் கிரேக்கரை அடக்கியாண்டார்கள். ஆனால் உண்மையிலே கிரேக்கர் தான் இத்தாலியரை அடக்கியாண்டார்கள்" என்னும் சரித்திரப் புதிர் ஒன்று போடுகிறது.

இதுபற்றிய விடை பொதுவாகப் பையன்களுக்கு ஞாபகத்தில் இருப்பதில்லை. ஆயினும் ஒரு பையனுக்கு மட்டும் ஞாபகத்தில் இருந்தது. அவன் சொல்லி விட்டான்: “கிரேக்க நாகரிகத்தையே இத்தாலியர் கைக்கொண்டார்கள்” என்று.

உபாத்தியாயர் மெச்சுகிறார். பையனுக்கும் எக்களிப்பு, விஷயம் தெரிந்துவிட்ட தாக.

வெறும் ஏமாளிக் காரியம் அல்லவா இது! உபாத்தியாயருக்குத்தான் தெரிய முடியுமா விஷயம்! அவரை விட்டு விடுவோம், பையன் பாடு என்ன? தெரியாத

தைத் தெரிந்து கொண்டதாக எண்ணிவிட்டானே! இந்தக் கண்மூடித்தனம் வாழ்க்கையை விட்டு ஒரு நாளும் போகாது.

அவனும் நாளாவட்டத்தில் உபாத்தியாராகி விடுகிறுன். அவன் கைக்குள் வரும் அடுத்த தலைமுறைப் பையன்களிடமும் அதே புதிரைப் போடுகிறுன். சரி. பையன்களும் தானும் ஒரே ஏமாளிக் கூட்டந்தான்.

"குருடும் குருடும் குருட்டாட்டம் ஆடிக்
குருடும் குருடும் குழிவீழும் ஆறே"

இந்த விதமாகப் பாடங்களைப் படித்ததிலிருந்துதான், நம்மவருக்குப் "பட்டிக் காட்டுப் பாங்கு" காண்ட்" என்ற பயனில். சொல்லாடல் எல்லரம் வந்தது.

சிறுவயதிலேயே தெரிந்தது இது, தெரியாதது இது, ஒன்றை அனுபவிக்கிறேம், மற்றென்றை அனுபவிக்கவில்லை என்ற வித்தியாசம் தெரியும்படியாகக் கல்வி புகட்ட வேண்டும். அப்படியானுல்த்தான் வயசான பிறகு, பி. ஏ. பி. எல். எல்லாம் தேறின பிறகு, தெலுங்கு நன்ருகக் கற்காததால் - அதைவிட நாம் தெலுங்கராய் இல்லாததால், தெலுங்குப் பாடல்களை நாம் அனுபவிக்கவில்லை தான் என்பது தெரியவரும்."

இவ்வளவும். சங்கீதமும் சாதித்யமும் என்னும் கட்டுரையில் உள்ள ஒரு பகுதி.

நம்முடைய அறியாமையைப் பிட்டுப்பிட்டு எப்படியோ ரசிகமணி காட்டி விட்டார்கள். அதிசயிக்கத்தக்க முறையில் எப்படியோ விளக்கிவிட்டார்கள். ரசிக மணி ஒருவருக்குத் தான் சதுரப்பாடு மிக்க இந்த வித்தகம் முடியும்.

டி. கே. சியின் கருத்துக்கு உறுதி கொடுக்கிற பாடல் பகுதி, "குருடும் குருடும்" என்னும் பாடலின் பகுதி, படிக்கப் படிக்க ஆனந்தத்தைக் கொடுத்தது, ஆனுல், அது எந்தப் புத்தகத்திலுள்ளது, யார் பாடியது என்பது அப்பொழுது எனக்குத் தெரியாது.

---- ---- ---- ---- ---- ---- ---- ---- ---- ---- ----

1946ம் வருடம், மே மாதம், ரசிகமணியை, அவர்கள் வீட்டில் சந்தித்துப் பேசிக்கொண்டிருந்தேன். அற்புத ரசத்தைப்பற்றிப் பேச்சு வந்தது. இதயஒலியைப் பற்றியும், சங்கீதமும் சாகித்யமும் என்பது பற்றியும் பேச்சு வந்தது. "குருடும் குருடும்" என்னும் பாடல் பகுதியை நான் விசாரித்தேன்.

அது திருமூலர் பாடல் என்று ரசிகமணி சொல்லிக் கொண்டே,

*"குருட்டினை நீக்கும் குருவினைக் கொள்ளார்*
*குருட்டினை நீக்காக் குருவினைக் கொள்வர்*
*குருடும் குருடும் குருட்டாட்டம் ஆடிக்*
*குருடும் குருடும் குழிவீழும் ஆறே"*

என்று பாடல் முழுவதையும் பாடிக்காட்டினார்கள்.

"குருடன் குருடனுக்கு வழிகாட்டினுல்ப் போல, முட்டாளுக்கு முட்டாள் சொல்லிக் கொடுக்கிறுன்" என்று ஏசுநாதரும் சொல்லி இருப்பதை மகுடமாக வைத்தார்கள்.

"வாழ்க்கையின் அனுபவ உண்மையும், சமய ஞானமும் வேறு வேறல்ல. ஒன்றுதான் என்பதை எப்படியோ நீங்கள் விளக்கிவிடுகிறீர்கள். உண்மை ஒன்றையே பார்க்கிறீர்கள். அதையே அனுபவிக்கிறீர்கள். அதனுல் நீங்கள் சொல்கிற ஒவ்வொன்றும் கேட்பவருக்குத் தேவையான விஷயமாக இருக்கிறது. அப்படியே கேட்பவரோடு ஓட்டிக்கொள்கிறது விஷயம்" என்று ரசிகமணியிடம் நான் சொன்னேன்.

ரசிகமணிக்கு, ஒரே சந்தோஷம். "அப்படிச் சொல்லுங்கள்! அப்படிச் சொல்லுங்கள். நாமும் விஷயமும் ஒட்டிவிட வேண்டும் என்று சொல்லிவிட்டீர்களே! அதுதான் உண்மை. எவ்வளவு லகுவாகச் சொல்லிவிட்டீர்கள்!" என்று பாராட்டிஞர்கள். அப்படியே தம் அனுபவம் ஒன்றையும் சொன்ஞர்கள்:

"1924 - 25 வருடத்தில் கன்யாகுமரி போக நேர்ந்தது. அங்குள்ள சத்திரத்தில் ஒரு அறையில் தங்கி இருந்தேன். திவான்பகதூர் ஆவுடையப்பிள்ளை என்னோடு தங்கி இருந்தார்கள். நல்ல அமைதியான இடம். தமிழ் சம்பந்தமாகவும் சமயம் சம்பந்தமாகவும் பேச்சு நடக்கும். நான் சொல்வதைக் கேட்பதற்கு டாக்டர் நாயுடு முதலியவர்களும் வருவார்கள்."

"வ. உ. சிதம்பரம்பிள்ளை ஒரு நாள் அங்கு வந்து சேர்ந்தார்கள். திருமூலர் பாடல் ஒன்றை விளக்க நேர்ந்தது."

"குருநாதர் ஒருவர் தத்துவ உண்மையை மாணவர்களுக்கு விளக்கிக் கொண்டிருக்கிறுர். பக்கத்தில் தச்சுப்பட்டறை ஒன்று, அதில் வேலை நடக்கிறது. கொட்டாப் புளிச்சத்தம் பலமாகக் கேட்கிறது. அங்கு நடைபெறும் வேலை இன்னதென்று பார்த்து வருமாறு மாணவன் ஒருவனை குருநாதர் அனுப்பிஞர்."

"மாணவனும் வந்தான். பெரிய பெரிய கால்களும் தும்பிக்கையும், மத்தகமும், வயிறும் தயாராதிக்கிடப்பதைப் பார்த்தான். ஓடோடிவந்து குருநாதரிடம் சொன்ஞன் ஐயா! யானை செய்கிறுர்கள் என்று.

“யானையை என்ன மரத்தில் செய்கிறார்கள் என்று குருநாதர் கேட்டார். மாணவனோ தலையைச்சொறிந்தான்.”

“மற்றொரு மாணவனை அழைத்து, அங்கு என்ன மரத்தில் வேலை நடைபெறு கிறதென்பதை தெரிந்துவர ஏவினார்.

“முறித்தும், தறித்தும் கிடக்கிற மரத்துண்டுகளை உற்று நோக்கினான் மாணவன். இழைப்புளி கொண்டு இழை இழையாக உரித்தெடுத்த மர ஆடையை எடுத்து முகர்ந்தும் பார்த்தான். மரத்துண்டு ஒவ்வொன்றையும் கிள்ளியும் பார்த்தான். உரசியும் பார்த்தான். சொரண்டியும் பார்த்தான்.”

“ஓட்டமாக ஓடிவந்தான். குருநாதரே! வேலை தேக்கில் நடைபெறுகிறது என்று உத்ஸாகமாக முழங்கினான்.”

“என்ன வேலையப்பா நடைபெறுகிறது?” என்று நிதானமாகக் கேட்டார் குருநாதர்.”

“பரக்கப் பரக்க விழித்தான் மாணவன், நம்மில் ஒவ்வொருடைய காரியமும் மாணவனுடைய காரியந்தான். வஸ்துக்களைப் பார்க்கிறோம். அவற்றின் வேறுபாட் டையும் பார்க்கிறோம். ஆனால், அடிப்படையான கடவுள்த்தத்துவம் நமக்குப் புலனாவதில்லை.”

“கடவுள்த்தத்துவம் புலனாகிவிட்டாலோ, வஸ்துக்களும் மறைந்துவிடும். வேறுபாடும் ஒழிந்துவிடும்.”

இது சம்பந்தமாகத் திருமூலர் சொல்வதைப் பார்போம்.

“*மரத்தை மறைத்தது*
*மாமத யானை*
*மரத்தில் மறைந்தது*
*மாமத யானை*
*பரத்தை மறைத்தது*
*பார்முதல் பூதம்*
*பரத்தில் மறைந்தது*
*பார்முதல் பூதம்*”

“பாடலைப் பாடி முடித்தவுடன் ஆஜானுபாகுவான சாமியார் ஒருவர் அங்கு வந்தார். அவர் யாழ்ப்பாணத்தைச் சேர்ந்த துறவி. ஆங்கிலம், ஜெர்மன், சமஸ்கிரு தம், முதலிய பாஷைகளை நன்றாகப் படித்தவர் அவர். தத்துவம், விஞ்ஞானம், கலை அவ்வளவையும் ஒரு கை பார்த்தவர்.”

வந்தவர் என்ன சொன்னார்:

"நீங்கள் பேசுகிறது அவ்வளவையும் நான் அனுபவித்துக் கொண்டே இருக்கி றேன். இதோ இந்தப்பக்கத்து அறையில் தான் இருக்கிறேன்."

ஐரோப்பா முழுவதையும் தான் சுற்றி இருக்கிறேன். அமெரிக்காவிலும் இருந்தவன் தான். எத்தனையோ அறிஞர்களோடு பேசி உறவாடி இருக்கிறேன்.

இவ்வளவு தெளிவோடும், உறுதியோடும் உண்மையை வேறு யாரும் சொல் லியதில்லை. எப்படி உங்களால் சொல்ல முடிகிறது, எவ்வளவு எளிதாகச் சொல்லி விடுகிறீர்கள் நீங்கள்?

தெளிவும் ஞானமும் நிறைந்த உங்கள் பெயர் இந்தியா முமுவதும் ஒலிக்க வேண்டும். அன்னிய தேசங்களிலும் கேட்க வேண்டும். ஏன் அப்படி இல்லை!"

இந்த இடத்தில் பேச்சை நிறுத்தி, மீசையை வருடிக் கொடுத்தபடியே இருந்தார்கள் டி.கே.சி.

சாமியாருக்கு என்ன பதில் சொன்னீர்கள் என்றேன் நான். "என்னத்தைச் சொல்ல! என் பெயர் முடங்கிக் கிடப்பதற்குக் காரணம் இரண்டு கோளாறுகள். ஒன்று கடவுளுடையது. மற்றொன்று என்னுடையது!

கடவுள் செய்த தவறு என்னைத் தமிழ் நாட்டில் பிறக்க வைத்தது. நான் செய்த. தவறோ காவி புனையாதது!" என்று முடித்தார்கள்.

--- ---- ---- ---- ---- ---- ---- ---- ---- ---- ----

1953ம் வருடம் என்று நினைக்கிறேன் . நானும், டி.கே.சி.யும் குற்றாலத்தில் அவர்கள் வீட்டில் பேசிக் கொண்டிருக்கிறோம். சென்னை கிறிஸ்தவக் கல்லூரியில், தமிழ்ப் பேராசிரியராகப் பணியாற்றிக்கொண்டிருந்த, திருவாளர் கு. ஆதித்தன் என்பவர் டி.கே.சியிடம் வந்து அமர்ந்தார்.

"திருமூலர் பாடல்களில் ஒன்றிரண்டாவது தங்களிடம் கேட்க வேண்டும் என்பது என் நெடுநாளைய ஆசை. இன்று எப்படியாவது திருமந்திரப்பாடல்களைக் கேட்க வேண்டும்........ "" என்று பேராசிரியர் சொன்னர்.

டி. கே. சி. என்ன சொன்னார்கள்?

"இருபத்தைந்து ஆண்டுகளுக்கு முன்பு, சைவசித்தாந்த மகா சமாஜத்தார், திருமந்திரப் பாடல்களை அழகிய புத்தகமாக அச்சிட்டார்கள். வெளியீட்டு விழா சென்னையில் நடந்தது. விழாவில் என்னையும் பேசச்சொன்னர்கள். நான் சொன்

னேன், “திருமூலர் திருமந்திரப் புத்தகம் என்னிடத்திலும் இருக்கிறது. அதிலும் மூவாயிரத்துச் சொச்சம் பாடல்கள் இருக்கவே செய்கின்றன. கடந்த முப்பது வருடங்களாகப் பாடல்களைப் பார்த்து வருகிறேன். ஏதோ அங்கொன்றும், இங்கொன்றுமாகப் பாடல்கள் விளங்குகின்றன. விளங்காத பாடல்களுக்கு நேரே x என்று அடையாளம் போட்டு வைத்திருக்கிறேன். என்னுடைய திருமந்திரப் புத்தகத்தைப் புரட்டினால், பக்கம் பக்கமாக x என்னும் அடையாளமாகவே இருக்கும்.

மொத்தம் மூவாயிரம் பாடல் என்றால், விளங்காத பாடல் இரண்டாயிரத்துத் தொளாயிரத்துச் சொச்சம். விளங்கிய பாடல்களே நூற்றுக்கும் உள்ளேதான்.

எனக்கு விளங்கிய பாடல்கள் என்னை விட்டுவிலகுவதே இல்லை. சதா என்னை உரசிக்கொண்டே இருக்கின்றன. அதனால் புத்தகத்தை அப்படியே அலமாரியில் வைத்துப் பூட்டி விட்டேன்.

நான் அனுபவித்த பாடல்களில் இதோ ஒன்று:

“யாரறி வார்எங்கள் அண்ணல் பெருமையை .
யாரறி வார்அந்த அகலமும் நிகளமும்
பேரறி யாத பெருஞ்சுடர் ஒன்றதின்
வேரறி யாமல் விளம்புகின் றேனே”

“ஒளியின் வேகம் வினாடிக்கு லட்சத்து எண்பத்து ஆறாயிரம் மைல் என்று கணக்கிட்டிருக்கிறார்கள். அப்படியானால் ஓராண்டுக்காலத்தில் அது எத்தனை கோடி மைலைத் தாண்டிச் செல்லும்! கிட்டத்தட்ட ஐந்து லட்சம் கோடி மைலைத் தாண்டிச் சென்று விடும் ஒளி.

“நமக்கும் சூரியனுக்கம் உள்ள தூரம் ஒன்பது கோடி மைல். அதே தூரத்தில்: ஐம்பதாயிரங்கோடி சூரிய மண்டலங்களை வைக்க வேண்டும். ஒளி பல்வ அவ்வளவையும் கடந்தவர 365 நாட்கள்தான் தேவை.”

“"நட்சத்திரங்களின் தூரத்தைப்பற்றி யோசிக்கிற பொழுது நமது மனசே செயலற்றுப் போய்விடும்.”

“பூமி பிறந்தது எப்பொழுதென்று நமக்குத் தெரியாது. பலகோடி ஆண்டுகள் இருக்கும். சில நட்சத்திரங்களின் ஒளி இன்னும் பூமியை தேக்கி வந்து கொண்டு தான் இருக்கிறதாம். வந்து சேரவில்லையாம்.”

“ஏத்தனையோ கோடி ஆண்டுகளாகப். பிரயாணம் செய்தும் ஒளியால் எட்டிப் பிடிக்க முடியவில்லை என்றால், அந்த நட்சத்திரங்களின் தூரத்தை எப்படி அளப்பது?”

“ஒரு அண்டத்தில் இப்படிப் பல கோடி. நட்சத்திரங்கள் உள்ளன. ஒரு அகண்டத்திலோ, அப்படிப் பல கோடி அண்டங்களே இருக்கின்றன.”

“அகண்டங்கள் கோடானகோடி சேர்ந்ததுதான் பிரபஞ்சம் - கடவுள்த் தத்துவம்.”

“கடவுளை நான் தெரிந்துகொண்டேன் என்று சொல்வதில் ஏதேனும் விஷயம் உண்டா?”

“கடவுள்த் தத்துவத்தை நினைத்த மாத்திரத்திலேயே ஒரே அதிசயத்திற்கு ஆளாகி விடுகிறார் திருமூலர்.”

“திருமூலருடைய அதிசய பாவம். வார்த்தைகளாய் விளைந்து, தாளமாய் நின்று, நடனமே ஆடி விடுகிறது.”

ரசிகமணி சொல்லியதை பேராசிரியரும் நானும் மாந்தி மாந்தி அனுபவித்தோம்.

ஒன்றை மறந்து விட்டேன். அதையும். சொல்லி விடுகிறேன்.

--- ---- ---- ---- ---- ---- ---- ---- ---- ---- ----

1946-ம் வருடம் டிசம்பர் மாதம், திரு.வி.கல்யாண சுந்தர முதலியாரை, ராயப்பேட்டை வீட்டில்ப் போய்ப் பார்ப்பதற்கு. டி.கே.சி. போனார்கள். நானும் கூடப் போனேன்.

திரு.வி.கவின் வீட்டில் பெரிய ஒரு திண்ணை. காவி உடை தரித்த சிவநேச செல்வர்கள். அங்கும் இங்குமாக உட்கார்ந்திருந்தார்கள்.

ரசிகமணியை வரவேற்ற திரு.வி.க. திருமுறையிலிருந்து ஒரு பாட்டுச் சொல்ல வேண்டுமென்று கேட்டுக் கொண்டார்.

அப்பொழுது டி.கே.சி. சொல்லியது என்ன?

“சென்னையிலிருந்து பங்களூர் போகும் சாலையில் கை காட்டி இருக்கிறது. பங்களூர் இருநூறு மைல் என்று அதில் எழுதியும் இருக்கிறது.

கைகாட்டும் திசையில் போக வேண்டும். இருநூறு மைல் போய்விட வேண்டும். பங்களூர் தெரியும். அப்படி இல்லாமல், கைகாட்டியைப் பிடித்துக் தொங்கினால் பங்களூர் வருமா?

கடவுளைப்பற்றிய அறிவு சாஸ்திரங்கள் -சயின்ஸ்கள் அவ்வளவும் கைகாட்டிகள்.

கடவுளைப் பற்றிய அறிவு பிரயோஜனப்படாது. கடவுளும் நாமும் ஒன்றாகி விடுகிற உணர்வுதான் பிரயோசனப்படும்.

மெய்யுணர்வுதான் கடவுளிடம் கொண்டுபோய்ச் சேர்க்கிற குரு.

சோகை நோயாளி ஒருவன். அவனிடம் வைத்தியர் சொன்னார். நீ தொடர்ந்து நாற்பது நாட்களுக்கு வெள்ளாட்டின் பால் சாப்பிட வேண்டும் என்று.

நாற்பத்தோராவது நாள் வைத்தியரிடம் வந்து விட்டான் நோயாளி.

“வெள்ளாட்டின் பாலை நீ சாப்பிடவில்லை?” என்று வைத்தியர் சொன்னார். “ஒவ்வொரு நாளும் ஆட்டுக்கிடைக்கே போய், வாய் வைத்தேயல்லவா பாலைக் குடித்தேன்” என்றான் நோயாளி.

வைத்தியருக்கு ஒன்றுமே ஓடவில்லை. நோயாளியை அழைத்துக் கொண்டு ஆட்டுக்கிடைக்கே வந்து விட்டார். மந்தையைப் பார்த்த உடனேயே ஒரே பாய்ச்சலாக நோயாளி பாய்ந்தான். ஒரு ஆட்டில் வைத்துச் சப்புச்சப்பென்று உறிஞ்சினான்.

குலுங்கிக் குலுங்கிச் சிரித்தார் வைத்தியர். நோயாளி வாயை வைத்தது மடுவில் இல்லை. ஆட்டுக்கடாவின் தாடை(அதர்)யில்.

உண்மை எது, ஆனந்தம் எது என்பதைத் தெரிந்து அனுபவிக்க வேண்டும். தெரியாமல் அனுபவிக்கிற காரியம் தாடையைச் சப்புற காரியந்தான்.

இது சம்பந்தமாகத் திருமூலர் சொல்வதை. இனிப் பார்ப்போம்.

*“காட்டும் குறியும்*
*கடநதவர் காரணம்*
*ஏட்டின் புறத்தில்*
*எழுதிவைத்(து) என்பயன்?*
*கூட்டும் குருநந்தி*
*கூட்டிடின் உண்(டு)அன்றேல்*
*ஆட்டின் கழுத்தில்*
*அதர்கிடந் தற்றே!”*

அற்புதமான பாடல். அதை அற்புதமாகப் பாடிப்பாடி அனுபவித்தார்கள் டி.கே.சி.

திரு.வி.கவோ உருகிவிட்டார்கள். அடியார் திருக் கூட்டமே உருகிவிட்டதென்றால், திரு.வி.கவால் எப்படிச் சும்மா இருக்க முடியும்.

சாதுக்களைப் பார்த்துத் திரு.வி.க. சொன்னார்கள். "சமயம் சம்பந்தமாகவும், திருமுறை சம்பந்தமாகவும், டி.கே.சி. யிடம்தான் கேட்க வேண்டும். டி.கே.சி ஒருத்தருக்குத்தான் உண்மை இன்னதென்று தெரியும். மற்றவர்களுக்குத் தங்கள் கெட்டிக்காரத்தனம் ஒன்றே தெரியும்."

திருக்கோவலூர் ஞானியார் சுவாமிகள் நடத்திய திருமுறை மகாநாட்டில் பல பெரியார்கள் பேசினார்கள். நானும் பேச்னேன். டி.கே.சியும் பேசினார்கள்.

ஞானியார் சுவாமிகள் மகாநாட்டை முடித்து வைத்து, "மூன்று நாட்களாக விற்பன்னர் பலர் உரையாற்றினார்கள். ஒவ்வொருவருடைய பொருளுரையும் சமயத்தைப்பற்றிய ஆரிக்மெண்டுகள். டி.கே.சியின் அருளுரையோ சமயத்தைப் பற்றிய ஜட்ஜ்மெண்ட்"

"இதற்குமேல் என்ன சொல்ல இருக்கிறது" என்று முடித்தார்கள். திரு.வி.க.

--- ---- ---- ---- ---- ---- ---- ---- ---- ---- ----

டி.கே. சியின் கருணையால் இப்படியாக நான் கேட்டு அனுபவித்த திருமந்திரப் பாடல்கள் நான்கு. மேலும் பல பாடல்களைக் கேட்க எனக்கு ஆசைதான். ஆனால் வாய்ப்பில்லாமலே போய்விட்டது.

நாயகன் வந்தவுடன் இன்னின்னவற்றையெல்லாம் கேட்டுவிட வேண்டும் என்று நாயகி திட்டம் போட்டிருப்பாள். நாயகனைப்பார்த்த மாத்திரத்திலேயே அவளுக்கு அவ்வளவும் மறந்துவிடும். அவன் சொல்திறதையே கேட்டுக் கேட்டு மயங்கிவிடுவாள். அவனை அனுபவிப்பதுலேயே தன்னை மறந்துவிடுவாள்.

இதைக்கேட்கவேண்டும், அதைக்கேட்டுவிட வேண்டும் என்று திட்டம் போட்டுத்தான் டி.கே.சியிடம் போவோம். அவர்கள் எதை விளக்குகிறார்களோ, அதைக் கேட்டுக்கேட்டு மயங்கி நிற்போம். மற்றவை அத்தனையும் மறந்தே போய்விடுவோம்.

--- ---- ---- ---- ---- ---- ---- ---- ---- ---- ----

திருமூலர் திருமந்திரத்தில் நான் கற்றதும் கேட்டதும் நான்கே பாடல்கள்தாம்.

அப்படி இருந்தும் திருமந்திரத்திலிருந்து எண்பத்தாறு பாடல்களை எடுத்து அவற்றிற்கு விளக்கமும் கொடுத்து ஒரு புத்தகமாகவும் எப்படி வெளியிட முடிந்தது? அது ஒரு விநோதந்தான்.

தாம் அனுபவித்த திருமந்திரப் பாடல்களை மட்டும் ஒரு நோட்டில் ரசிகமணி எழுதி வைத்திருந்தார்கள்.

ரசிகமணி காலமான பிறகு, ரசிகமணியின் பேரனும், எனது இனிய நண்பரு மாகிய, திரு.தீப. நடராஜன் மூலம் அந்த நோட்டைப் பார்க்க நேர்ந்தது.

நோட்டில் எழுதிவைத்திருந்த பாடல்களைப் படித்துப் படித்து உருகினேன். என்னுடைய அனுபவத்தையே ஒவ்வொரு பாடலுக்கும் விளக்கமாகக் கொடுத்தேன்.

எனது அருமை நண்பர், ஐ.டி. சிதம்பரம்பிள்ளை (இலஞ்சி): 1954-55ல் சாரல் என்னும் பெயரில் பத்திரிகை ஒன்று நடத்திவந்தார்கள். முதல் முதலாக இந்தத் திரு மந்திரப்பாடல்கள் விளக்கத்தோடு அதில்தான் வெளியிடப்பட்டன. அன்பர்கள் பலர் படித்து மகிழ்ந்து பாராட்டினுர்கள்.

மேன்மை தங்கிய ராஜாஜி அவர்களே, சாரல்பத்திரிகையில் வெளிவந்த திருமந்திர விளக்கத்தைப்படித்து விட்டு கீழ்க்கண்ட்படி எனக்கு எழுதினுர்கள்.

சென்னை
6-1-1955

“திருமலர் திருமந்திரத்தைப்பற்றி எழுதியிருக்கும் வியாசம் படித்து மகிழ்ந் தேன். டி.கே.சி மறுபடி காட்சி தந்தார் போலிருந்தது”

இராசகோபாலாச்சாரி

ஒரு மனிதனுக்கு இதைவிட வேறு என்னவேண்டும். பெரிய சாம்ராஜ்யம் ஒன்றையே உரிமையாக்கி, இதற்கு நீ தான் அதிபதி என்றும் மகுடம் சூட்டினுலும், அது, உளம் கனிந்து ஒரு மகான் பாராட்டுகிற பாராட்டுக்கு ஈடாகுமா?

--- ---- ---- ---- ---- ---- ---- ---- ---- ---- ----

என் விளக்கத்தோடு கூடிய திருமந்திரப் பாடல்களை, அனந்தக்கூத்து என்னும் பெயரில், 1956ம் வருடம், சென்னை ஸ்டார் பிரசுரத்தார் வெளியிட்டார்கள். தமிழகத்தில் நல்ல வரவேற்பிருந்தது புத்தகத்திற்கு. அதைப்படித்த அன்பர்களில்ச் சிலர். “விளங்காத தத்துவக்கருத்துக்களை எப்படி உங்களால் விளக்க முடிந்தது'” என்று ஆவலோடு விசாரித்தார்கள்.

அவர்களுக்கு நான் சொல்லிய பதில் இதுதான், எனக்கும் திருமூலர் பாடல்க ளுக்கும் சம்பந்தம் இல்லை. ரசிகமணி, டி.கே.சி என்னுள் இருந்து விளக்குதிருர்கள். “இப்படி விளக்க: உங்களால் எப்படி முடிந்தது” என்று டி.கே.சியிடந்தான் நீங்கள் கேட்கவேண்டும்.

ஒரு ஊருக்குப் போக வேண்டிய வழியையும், தூரத்தையும் கைகாட்டி எப்படிக் கை காட்டிக் காட்டிவிடுகிறதோ, அப்படியே ஒன்றைத் தெரிய வேண்டிய முறையையும், அனுபவிக்க வேண்டிய வழியையும் மகான்கள் காட்டிவிடுவார்கள்.

கவியை எப்படிப் பார்க்க வேண்டும். எப்படி அனுபவிக்க வேண்டும் என்பதை ரசிகமணி எனக்குக் காட்டி விட்டார்கள்.

வேறு என்ன வேண்டும்?

உண்மையைக் கண்டு விட்டால் போதும். எதன் மூலம் கண்டாலும் சரி. அப்புறம் ஒவ்வொன்றிலிருந்தும் உண்மை ஒன்றே தரிசனம் கொடுத்துக் கொண்டிரு க்கும்.

டி.கே.சியிடம் உண்மையோடு ஒரு பாடலை அனுபவித்து விட்டால் போதும். பிறகு, ஆயுள் முழுவதும் நாமே பாடல்களை அனுபவித்து அனுபவித்து ஆனந்திக் கலாம்.

ஞான மணங்கமழும் தெய்வமலராக விளங்கினுர்கள் ரசிகமணி, டிகே.சி! அவர்களுடைய அருளால், திருமூலர் திருமந்திர விளக்கம், ஆனந்தக்கூத்து என்னும் பெயரில் வெளிவந்தது, வெளிவருகிறது,

ஏற்கனவே இரண்டு தடவை பதிப்பாதி மளமளவென்று விற்று விட்டது ஆனந்தக்கூத்து.

அதன் பின் நீண்டகாலமாக அதை மறுபடி. பதிப்பிக்கவில்லை.

--- ---- ---- ---- ---- ---- ---- ---- ---- ---- ----

1977ம் ஆண்டு, திருக்குக்றாலம் ரோட்டரிக் கிளப்பில் இலக்கியச் சொற் பொழிவு ஒன்று நிகழ்த்த நேர்ந்தது.

மனித வாழ்க்கையின் முரண்பாடுகளையும், சிக்கல்களையும் நிர்ணயம் பண்ண முடியாத கோணல் மாணல்களையும் ஒருவகையாக எடுத்துச் சொல்ல நேர்ந்தது. வாழ்க்கையானது தடுமாறுமல் இருப்பதற்கு ஒரே ஒரு மருந்து பக்தி தான் என்று விளக்க நேர்ந்தது.

திருமூலர் பாடல்கள் இரண்டை வைத்தே விளக்க நேர்ந்தது. கூட்டம் முடிந்தபின், டாக்டர், திரு.A. கிருஷ்ணமூர்த்தி அவர்களும் நானும் அவர்களுடைய காரில் வந்து கொண்டிருந்தோம்.

“திருமூலார் இப்படியெல்லாம் சொல்லி இருக்கிறுர் என்பதும் தமிழில் இவ்வளவு உயர்ந்த வீஷயங்கள் சொல்லப்பட்டுள்ளன என்பதும் எனக்கு இன்று தான் தெரிந்தது” என்று டாக்டர் சொன்ஞர்கள்.

திருமந்திரவிளக்கம் - ஆனந்தக்கூத்து புத்தகமாக ஏற்கனவே வெளிவந்தது பற்றியும், மறுபடி அது அச்சிடவேண்டியுள்ளதுபற்றியும் டாக்டரிடம் சொல்ல நேர்ந்தது.

--- ---- ---- ---- ---- ---- ---- ---- ---- ---- ----

டாக்டருக்கு ஒரே உத்சாகம். புத்தகம் வெளிவர நானே உதவுகிறேன், உதவி செய்கிறேன் என்று வாக்களித்தார்கள். என்ஊச் சந்திக்கும் வேஊ ஒவ்வொன்றிலும் திருமந்திர நூல் பற்றி விசாரிப்பார்கள். சமய உண்மை பற்றியும், தமிழ் செய்கிற அற்புதம் பற்றியும் கேட்டு அனுபவிப்பார்கள்.

கடையநல்லூர் - கிருஷ்ணாபுரத்தில் இருக்கும், ஸ்ரீ வேம்பையர் சாசுவத தர்ம சாசனத்திலிருந்து இரண்டாயிரம் ரூபாய் இப்புத்தக வெளியீட்டிற்கு உதவுமாறு, டாக்டரவர்கள் ஏற்பாடு செய்தார்கள். தாமும் ரூபாய் எழுநாற்றைம்பது புத்தக வெளி யீட்டிற்காகக் கொடுத்து உதவினார்கள்.

அருமையும் எளிமையும் நிறைந்த, டாக்டர் கிருஷ்ணமூர்த்தி அவர்களுக்கு முதலில் நன்றி தெரிவித்துக் கொள்கிறேன்.

வயிரவன்குளம் மிட்டாதாராக விளங்கிய ஸ்ரீமான் வேம்பையர் அவர்கள், நேர்மைக்கும் உழைப்பிற்கும் எடுத்துக்காட்டாக இருந்தார்கள். உழைப்பால் உயர்ந்த உத்தமர் என்பதற்கு ஸ்ரீமான் வேம்பையர் அவர்களே சிறந்த அத்தாட்சி.

கோடீஸ்வரராக வாழ்ந்து கொண்டே, எளிமைக்கும் எளிமையாக நடமாடி ஞர்கள். அந்த எளிமைக்குள்ளே கண்ணியம் இருந்தது. நாணயம் இருந்தது, தூய்மை இருந்தது.

ஸ்ரீமான் வேம்பையருடைய தவப்புதல்வர், திருவாளர், V.S. மணி ஐயர் B.A. B.L

அறநெறி வழுவாமல் தம் தந்தையார் ஈட்டிய பெரும் பொருஊ, திருவாளர் மணி ஐயர், வேம்பையர் சாசுவத தர்ம சாசனமாக நிறுவி உள்ளார்கள். தர்ம சாசனம் சுறு சுறுப்பாகவும், ஆரோக்கியமாகவும் இயங்கி வருகிறது. சமயம் பண்பாடு, கல்வி, மருத்துவம் முதலிய பல துறைகளுக்கு அது கைகொடுத்து உதவி வருகிறது.

பள்ளம் எங்கே இருக்கிறது என்று பார்த்துப் பாய்ந்தோடும் நீர்போல, நல்ல காரியங்கள் எங்கே இருக்கின்றன, எங்கே அவை, பணம் இல்லாமல் தத்தளிக்கின்

றன என்பதைக் கவனித்து, அங்கே சென்று வலியு உதவிபுரிந்து வருகிறது ஸ்ரீமான் வேம்பையர் சாசுவத தர்மசாசனம்.

வேம்பையர் சாசுவத தர்ம சாசனத்துற்கும், அதன் தலைவர், திரு. V.S. மணி ஐயர் அவர்களுக்கும் என்னுடைய நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்,

திருமூலர் திருமந்திரப்பாடல்களும், அவற்றின் விளக்கங்களும் "சாரல்" இதழில் வந்து கொண்டிருந்தன. காலஞ் சென்ற ஐஸ்டிஸ் திரு. N.சோமசுந்தரம் பிள்ளையவர்கள் சாரல் பத்திரிகையைப் பார்த்து, அதில் என்னுடைய திருமந்திரக் கட்டுரையைத் தொடர்ந்து அனுபவித்து வந்தார்கள்.

தம் அனுபவத்தையும், ஆனந்தத்தையும் ஒவ்வொரு மாதமும் எனக்குக் கடிதம் மூலம் வழங்கி வந்தார்கள்.

"உங்கள் கட்டுரை ஒன்றையே படிக்கிறேன். டி.கே.சியே சொல்வது போல இருக்கிறது" என்று பாராட்டிப் பாராட்டிக் கடிதம் எழுதினார்கள்.

திருமந்திரக் கட்டுரைகள் ஆனந்தக்கூத்தென்னும் புத்தகமாக வந்தது. அதற்கு அழயெ முகவுரை ஒன்றும் எழுதி உதவினார்கள். அது முதற் பதிப்பில் பிரசுரமா யிற்று.

தாம் அனுபவித்ததோடு நில்லாமல், தம் அன்பர்களை எல்லாம் திருமந்திரப் பாடல்களை அனுபவிக்கும்படி, அனந்தக்கூத்து நூலை அவர்களுக்கு வாங்கிக் கொடுத்துக் கொண்டிருந்தார்கள் திருவாளர் N. சோமசுந்தரம்பிள்ளை யவர்கள்.

அப்படிப் படித்தவர்களில், சிலர் - எனக்கு அறிமுகம் இல்லாத சிலர், ஆளந்தக்கூத்தை அனுபவித்துக் கடிதமே எழுதினார்கள்.

பாராட்டிக் கடிதம் எழுதியவர்களில், தற்பொழுது, இந்திய அரசின் பாதுகாப்பு அமைச்சராக விளங்குகிற, திருவாளர் சி. சுப்பிரமண்யம் அவர்களும் ஒருவர்.

திருவாளர், N. சோமசுந்தரம்பிள்ளை அவர்களுக்கு என் அஞ்சலியைச் சமர்ப்பித்துக் கொள்கிறேன்.

"உலக இதய ஒலி" ஆசிரியரும், என் அருமை நண்பருமாகிய, திரு T. D. திருமலை அவர்கள், இந்நூல் வெளி வருவதற்கு பல்லாற்றானும் பாடுபட்டார்கள். அவர்களுடைய அன்புக்கும், கைம்மாறு கருதா உதவிக்கும் என் நன்றி.

இப்படிக்கு,
**ல. சண்முககந்தரம்**

# பாடியது மூவாயிரம்

**1**

பேரண்டங்களாகட்டும், பரமாணுக்கள் ஆகட்டும் அவ்வளவும் இறைவன் ஒருவன்தான். இறைவனைத் தவிர வேறு ஒன்றுமே இல்லை.

ஆணவதத்துவம் இருக்கிறதே அது இறைவன் வேறு உயிர் வேறு என்று பேதப்படுத்துறெது. அது காரணமாக இறைவன், உயிர், ஆணவம், என்கிற மூன்று தத்துவங்கள் இருப்பனபோலத் தோன்றுகின்றன. தோற்றம் வெறும் தோற்றம்தான்.

திருமூலர் ஆணவத்தை அழித்து விடுவதற்குரிய உபாயத்தை எடுத்துச் சொன்னர். அவர் சொல்லிய சாதன முறையால் ஆணவம் விலகிவிடும். இறை வனும் உயிரும் ஒன்றே என்கின்ற உண்மை நிலையும் உண்டாகிவிடும்.

உண்மை நிலையை விளக்கவந்த திருமூலருடைய கவிதைகள் மூவாயிரம். அவற்றை முன்னூறு மந்திரங்களாகவும், முப்பது உபதேச வழிகளாகவும், நம்மவர்கள் பாராட்டி வந்திருக்கிறார்கள். எப்படி என்று பார்க்கலாம்.

**மூலன் உரை செய்த**
**முப்ப(து) உபதேசம்**
**மூலன் உரை செய்த**
**முன்னூறு மந்திரம்**
**மூலன் உரை செய்த**
**மூவா யிரந்தமிழ்**
**மூலன் உரை செய்த**
**மூன்றும் ஒன்றுமே.**

பதி, பசு, பாசம் என்பன மூன்று

ஒன்று(ம்) ஆம் - ஆணவம் நீங்க, இறைவனும் உயிரும் ஏகமாய்க் கலந்து விடும்.

குறிப்பு :-

முப்பது, முன்னூறு, மூவாயிரம் என்று ஏறிக்கொண்டே போய்க் கடைசியாக மூன்று, ஒன்று என அற்புதமாக முடிந்து விடுகிறது எண்.

எண்களை வைத்துத் தமிழ் பாஷை விளையாண்டிருப்பது வெறும் விளையாட்டல்ல. அனுபவிக்க வேண்டிய விளையாட்டு.

--- ---- ---- ---- ---- ---- ---- ---- ---- ---- ----

# கன்றுபோல் கதறினேன்

**2**

இறைவனுடைய பேருள்ளத்தில் ஆனந்தக் கனவுகள் உண்டாகிக் கொண்டி ருக்கின்றன. இறைவனுடைய கனவை ஆனந்த நடனம் என்றும் இறைவனுடைய பேருள்ளத்தைப் பொன்னம்பலம் என்றும் நம்மவர்கள் சொல்லி இருக்கிறுர்கள்.

அப்படியானுல் ஒவ்வொரு பொருளும் இறைவனுடைய பொன்னம்பலந்தான், இறைவனுடைய அனந்த நடனமுந் தான். இந்த உண்மையை தெரியவொட்டாமல் ஆணவம் மறைத்துவிடுகிறது. பொன்னம்பலத்தையும் ஆனந்த நடனத்தையும் அனுபவிக்க விடாமல் ஆணவம் நம்மைத் தடுத்தும் விடுகிறது. ஆணவத்தை விலக்க விலக்கப் பொன்னம்பலம் தெரிந்துவிடும். ஆனந்த நடனமும் தெரிந்துவிடும்.

ஆணவத்தை விலக்கிற காரியத்தை நந்தி என்றும் அதன் மூலம் ஏற்படுகிறது. அனுபவ சக்தியை விநாயகர் என்றும் சொல்லி இருக்கிறுர்கள்.

ஆணவம் விலகுவதற்கு ஏதுவான சித்தியை மனதில் வைத்துத் தியானிக்க வேண்டியது முறைமைதான்.

**ஐந்து கரத்தனை**
**ஆனை முகத்தனை**
**இந்தின் இளம்பிறை**
**போலும் எயிற்றனை**
**நந்தி மகன் தனை**
**ஞானக் கொழுந்தினை**
**புந்தியுள் வைத்(து) அடி**
**போற்று கின் றேனே.**

இந்தின் இளம்பிறை போலும் - மூன்றும் பிறைச் சந்திரஊ ஒத்த. எயிற்றஊ- - வஊந்த தந்தத்தை உடையவஊ. நந்தி மகன் - சிவபெருமானுடைய மகன். எல்லாமே இறைவன் என்று சொல்லும் பொழுது ஆணவத்தை விலக்குவதும் இறைவனுடைய செயல் என்றுதான் சொல்ல வேண்டும். அத்தகைய இறைவனு டைய செயஊ இறைவனுடைய மகன் என்று உபசாரமாகச் சொல்லி இருக்கிறது.

புந்தி - இதயம்.
அடி - திருவருள்.

**3**

தாயானவள், தன்னுடைய குழந்தையை எத்தனையோ விதங்களில் வைத்துப் பாராட்டுகிறள். தங்கக்கட்டியாகவும், முத்து மாலையாகவும், அரசனுகவும், தெய்வமாகவும் இன்னும் எத்தனையோ தத்துவங்களாகக் குழந்தையை வைத்துப் பாராட்டுவாள் தாய். அதே போலத் தமிழ் பாஷையும் உண்மையை எத்தனையோ விதங்களில் வைத்துப் பாராட்டுவதைப் பார்க்கலாம்.

--- ---- ---- ---- ---- ---- ---- ---- ---- ---- ----

இறைவன் தான் எங்குமாய் எல்லாமாய் நிறைந்திருக்கிறுன். அது மாத்திரமா? உண்மையை அறிகிறவரும் அறிவிக்கின்றவரும் அதே இறைவன்தான்.

அறிவிக்கின்ற தத்துவத்தை நந்தி என்றும் அறிகிற தத்துவத்தைக் கணபதி என்றும் திருமூலர் வணங்குகிறுர். பெயர் வெவ்வேறுக இருந்தாலும் திருமூலரு டைய ஆராதனை அவ்வளவும் இறைவனைச் சார்ந்துவிடுகின்றன.

**ஒக்கநின் றுனை**
**உலப்பிலி தேவர்கள்**
**நக்கன் என் றேத்திடும்**
**நாதனை நாள்தொறும்**
**பக்கம்நின் றுர்அறி**
**யாத பரமனை**
**புக்குநின் றுன்னியான்**
**போற்றி செய்வேனே.**

ஒக்கநின்றுன் - ஒவ்வொரு பொருளிலும் நிறைந்திருப்பவன்.

உலப்பு இலி - குறைவு, தேய்வு இல்லாத முழு முதற் பொருள்.

புக்கு - நந்திக்குள் நான் புகுந்து.

உன்னி - மிச்சம் சொச்சம் இல்லாமல் அறிந்து.

போற்றி செய்தேன் – அவனேடு அவனுய் நிறைந்து கொண்டேன்.

**குறிப்பு:**

தேவர்கள், புல்பூண்டு முதலிய ஒவ்வொரு உயிர்களிலும் உள்ள தத்துவங்கள் அவ்வளவையும் கடந்தவன் நந்தி. தத்துவங்களால் அறியமுடியாத நந்தியை நான் கலந்து விட்டேன் என்பது கருத்து.

பாடல் அருமையான பாவமும் கட்டுக்கோப்பும் கொண்டது. சுகமான காதல் ஒலி ரீங்காரம் செய்வதைப் பாடி அனுபவிக்கவேண்டும்.

**4**

உயிர் வர்க்கங்களில் உள்ள எண்ணிறந்த தத்துவங்கள் என்ன, அவைகளின் ஒழுங்கான நியதிகள் என்ன, படைப்பு, காப்பு, மறைவு என்கின்ற மூன்று தத்துவ நிலைகள் என்ன, அவ்வளவும் உண்மையான அறிவுத் தத்துவத்தின் திருவிளையா டல்தான்.

அத்தகைய அறிவுதான் ஞானமாகவும் வீடாகவும் இருக்கிறது.

**அவனை ஒழிய**
**அமரரும் இல்லை.**
**அவனன்றிச் செய்யும்**
**அருந்தவம் இல்லை.**
**அவனன்றி மூவரால்**
**ஆவதொன் றில்லை.**
**அவனன்றி ஊர்புகும்**
**ஆறறி யேனே.**

அவன் - அறிவும், அறிவிப்பவனும் அறிபவனும் ஆகிய நந்தி.

அமரர் - உயிர்த் தத்துவம்.

அருந்தவம் - சராசரங்களின் ஒழுங்கும் நியதியும்.

மூவார் - படைப்பு, காப்பு, மறைவு என்னும் மூன்று தத்துவ நிலைகள்.

ஊர் - இறைவனைத் தவிர ஒன்றும் இல்லை என்று இறைவனேடு கலந்துவிடுகிற நிலை.

ஆறு அறியேன் - வழி தெரியவில்லை.

**குறிப்பு:-**

கவி என்றல் அதில் கவிஞனுடைய இதயம் இருக்க வேண்டும். இதயத்தில் சுரக்கிற ஆசை இருக்கவேண்டும். ஆசை வெறியாகிக் கூத்தாடுகிற நடனமும் இருக்கவேண்டும் என்று பெரிய பெரிய ஆசிரியர்கள் சொல்லுவார்கள். ஆசிரியர்க ளுடைய முடிவுக்கு எடுத்துக்காட்டாக இருக்கின்றன தமிழ்க் கவிகள். திருமூலரு டைய கவியும் விலக்கில்லைதான்.

"அவனன்றி ஊர் புகும் ஆறறியேனே"

என்று திருமூலருடைய இதயமும் ஆசையும் வெறி கொண்டு நடனமாடுகிறது. தமிழ்மொழி அப்ப்டி எல்லாம் நடனமாட வைக்கிறது. காதல் கண்ணோடு பார்த்து அனுபவிக்க வேண்டிய கவி.

**5**

தன்னோடு சகலமும் கலந்துவிட இறைவன் சாதனங்கள் கொடுக்கலாம். சாதனங்களைக் கொடுத்த இறைவன் "தன்னோடு கலந்துவிடுங்கள்" என்று உயிர்களை அழைப்பதில்லை. சாதனங்களைக் கொடுத்தது போதாது. இறைவனே வந்து உயிர்களை அழைக்க வேண்டும் என்று எண்ணுவது வீணான காரியம்.

--- ---- ---- ---- ---- ---- ---- ---- ---- ---- ----

ஆகாயத்தில் தட்டுத் தட்டாக உலாவுகிற மேகங்கள் விவசாயிகளுக்குத் தண்டோராக் கொடுக்கின்றன: "விதைப் பெட்டிகளைத் தூக்குங்கள், விதையுங்கள், நடவுங்கள், களை பிடுங்குங்கள்" என்று.

இறைவனும் மேகம் போலவந்து ஏன் தண்டோராக் கெகொடுக்கவில்லை என்று சர்ச்சை பண்ணுகிறார்கள் மனிதர்கள்.

தாய்ப்பசுவை நினைத்துக் கன்று கதறுகிறது. தாய்ப்பசு ஒடோடியும் வந்து கன்றுக்கு அமிர்தத்தைப் பொழிகிறது. திருமூலரும் கன்றுபோல இறைவனை நோக்கிக் கதறினார். இறைவனும் அப்படியே அமிர்தத்தைப் பொழிந்து விட்டான்; திருமூலருக்குத்தான்.

**வான் நின்(று) அழைக்கும்**
**மழைபோல் இறைவனும்**
**தான் நின்(று) அழைக்கும் கொல்**
**என்று தயங்குவர்.**
**ஆன் நின்(று) அழைக்கும்**
**அதுபோல நந்தியை**
**நான் நின்(று) அழைத்தேன்**
**ஞானம் கருதியே.**

வான்நின்று - ஆகாயத்தில் நின்றுகொண்டு

மழை--மேகங்கள்

அன் - மேயப்போகும் பசுவை

நின்று அழைக்கும் - தொழுவுக்குள் இருந்து கூப்பிட்டுக் கதறுகிற

அதுபோல் - கன்றைப்போல

நந்தியை - இறைவஉன

நின்று அழைத்தேன் - அவஉன அடையவேண்டும் என்கிற வெறியோடு நின்று கதறினேன்.

ஞானம் கருதி - ஆணவத்கை விலக்கி உண்மையோடு கலப்பகுற்காக.

## அறிவுக்கு அறிவு அவன்

**6**

ஆகாயம் என்றெ நுண்ணிய தத்துவம் தடித்துத் தடித்துக் காற்ருகியது. காற்று அப்படியே தீ, நீர், கல் முதலிய தத்துவங்களாக விஊந்தன. வஸ்துக்களுக்கெல்லாம் அடிப்படையான ஐந்து தத்துவங்கஊயும் ஐந்து பூதங்கள் என்று சொல்லியிருக்கிறது.

ஆகாயம் என்கிற தத்துவமோ மனம் என்கிற நுட்பமான வஸ்துவிலிருந்து உண்டாகியதுதான். ஆறுவது ஆதாரம் என்று சொல்லுவதும் மனம் என்கிற நுட்பமான வஸ்துவைத்தான்.

காலம் கடந்ததாய், இடபேதமற்றதாய் வியாபித்திருக்கிற மனம் ஆணவ அறிவால் அமுக்கப்பட்டுக் கிடக்கிறது.

--- ---- ---- ---- ---- ---- ---- ---- ---- ---- ----

பூமிக்குள் வியாபித்திருக்கிற நீர் ஓட்டத்தைச் சரளும் பாறையும் வெளிவர விடாமல் மூடி இருக்கிறது. சரஊத் தோண்டி. எறிந்துவிட்டுக் கல்ஊயும் அப்புறம் தூக்கி வைத்து விட்டால் அருவி போலப் பொத்துக்கொண்டு வெளியே வந்துவிடும் ஊற்று. அதேபோல ஆணவம் எனகிற பாறையை அப்புறப்படுத்திவிட்டால் மனதிலி ருந்து இறுதி யற்ற பேரானந்தம் வெள்ளமாய்ப் பெருகிவிடும்.

**வரை இடை நின் றிழி**
**வான் நீர் அருவி**
**உரை இலா உள்ளத்து**
**அகத்துநின் றூறும்**
**நுரை இல்ஊல மாசில்ஊல**
**நுண்ணிய தெண்ணீர்.**
**கரை இல்ஊல எந்தை**
**கழுமணி ஆறே.**

வரைஇடை - மலைமேல்

நின்று இழி - பெய்து ஓடைகளாய் இறங்குகிற.

வான் நீர் அருவி - தெளிந்த அருவி நீர், அதைவிட மேலான நீர் இதயத்தில் ஊறுகிறது.

உரைஇலா உள்ளத்து - பேதம் மறைந்த உடன் வார்த்தையும் மறைந்துவிடும். மனம் ஒன்றுதான் மிஞ்சி இருக்கும்.

அகத்து நின்று ஊறும் - அத்தகைய மனத்தின் உள்ளிருந்து சுரந்துவரும் நீர், எங்கும் கிடைக்காத கழுமணி ஆற்று நீராகும்.

**7**

ஆணவ அறிவை விலக்குவதற்கு எத்தனையோ உபாயங்கள் இருக்கின்றன.

சிவலிங்கத்தை நாள்தோறும் தேய்த்துக் குளிப்பாட்டுவது, நந்தவனத்தைக் கொத்திக் கொடுப்பது, பூக்களைக் கொண்டுவந்து சிவலிங்கத்தை அலங்காரம் பண்ணுவது, ஆலயத்தைப் பெருக்கி மெழுகித் திருக்காப்பிடுவது அவ்வளவும் ஆணவத்தை விலக்குவதற்குரிய உபாயங்கள்தாம்.

இதைத் தொண்டு என்று சொல்லுவார்கள். இனித் திருநீறு அணிவது, உருத்தி ராட்சம் புனைவது, இறைவனுடைய திருநாமங்களைச் சொல்லிச் சொல்லி மகிழ்வது, அவனுடைய திருக்கோயிலைப் பாதுகாப்பது அகிய காரியங்களைத் திருப்பணி என்று சொல்லுவார்கள். இதுவும் ஆணவத்தை அழிப்பதற்கு உரிய உபாயந்தான். தொண்டு. திருப்பணி, இவைகளை அனுபவிக்க அனுபவிக்க ஆணவம் விலகிக் கொண்டே போகும். ஆணவம் விலக விலக எல்லாம் அவனே, அவனுடைய திருவிளையாடலே என்கிற பக்குவ நெறி வந்து சேரும். வந்து சேர்ந்த பக்குவநெறியை விட்டு விடாமற் காப்பாற்றுவது கொஞ்சம் கடினமான காரியம் தான். ஆனந்தம் வந்து சேருகிற வேளையில் அணவம் விலகிக்கொள்ளுதிறது. அப்படியானால் ஆணவத்தை விலக்கி வைக்கிற வேளையில் ஆனந்தம் வந்துசேர்வது இயல்பான காரியம்தானே.

--- ---- ---- ---- ---- ---- ---- ---- ---- ---- ----

திருத்தொண்டிலும் திருப்பணியிலும் தோய்ந்து பக்குவம்பெற்ற இதயம், எல்லாம் அவனே என்கிற பக்குவ நிலையில் நிற்கிறது. உயிர்களிடத்து அது பேதம் பாராட்டுவது கிடையாது. பேதம் பாராட்டாத அரிய சாதனையை வளர்த்துக் கொண்டே வரவேண்டும். எப்படி?

பசுவைக் கண்டாலும் சரி, மனிதர்களைக் கண்டாலும் சரி எல்லாம் இறைவன்தான் என்கிற நிலையை விடாதவர்கள் அவைகளுக்குத் தேவையான தொண்டை ஓடிவந்து செய்வார்கள். குனிந்து கை நிறையப் புல்லைப் பிடுங்கி, வேரில் ஒட்டி இருக்கிற மண்ணை உதறி எறிந்துவிட்டுப் பசுவினுடைய வாயில் அடுக்கடுக்காகப் புல்லைக் கொடுத்து ஊட்டுவார்கள். அவர்கள் பசுவிற்குச் செய்கிற காரியம் இறைவனுக்கே போய்ச் சேர்ந்துவிடுகிறது. பசுவினுடைய வாய்க்குள் புல்லானது போகும்பொழுதே அவர்களுடைய இதயத்திற்குள் ஆனந்தம் வந்துவிடுகிறது. 'பசிக்கிறது' என்று கேட்டால் போதும். உண்மையான பக்தர்கள் சும்மா இருக்கமாட்டார்கள். பசித்தவனுக்கு ஒரு பிடி அன்னமாவது கொடுத்துவிட்டு த்தான் சாப்பிடுவார்கள்.

ஆனந்த நிலையில் உள்ளவர்களுக்கு எதுவும் லகுவான காரியம்தான். பிறருடைய சுக துக்கங்களில் அப்படியே கலந்துவிடுவதும் லகுவான காரியம்தான்.

இப்படியாகத் திருத்தொண்டில் ஈடுபட்டுக் கனிந்தவர்களிடம் ஆணவ அறிவு இருக்கமுடியாது. ஆணவ அறிவு விலகியபின்பு இறைவனை அடைகிற காரியம் அவர்களுக்கு லகுவானதே.

**யாவர்க்கும் ஆம் இறை**
**வற்கொரு பச்சிலை**
**யாவர்க்கும் ஆம் பசு**
**விற்கொரு கைப்பிடி**
**யாவர்க்கும் ஆம் உண்ணும்**
**போதொரு வாயுறை**
**யாவர்க்கும் ஆம் பிறர்க்(கு)**
**இன்னுரை தானே.**

யாவர்க்கும் ஆம் - எல்லோராலும் முடியும், யாரும் விதி விலக்கல்ல.

பச்சிலை - பூ, இலை

கைப்பிடி - கையால் பிடித்துக் கொடுக்கிற புல்

உண்ணும்போது - சாப்பிட்டுக் கொண்டிருக்கிற வேளையானாலும் சரி

வாயுறை - ஒரு கவளம் சோறு

இன்உரை - அனுதாபம் கொண்ட வார்த்தை.

**8**

காலம் இடம் எல்லாவற்றையும் கடந்து நிற்பவன் இறைவன். அவனைத் தவிர வேறு பொருள்கள் இருந்தால் அல்லவா அவனைச் சுட்டிக் காட்டுவதற்குப் பெயர் இருக்க முடியும்.

பெயர் இல்லாத இறைவனைப் பெயர் வைத்து அழைப்பது விந்தையான காரியம்தான்.

**யார்அறி வார்எங்கள்**
**அண்ணல் பெருமையை**
**யார் அறி வார் அவ்**
**அகலமும் நிகளமும்**
**பேர் அறி யாத**
**பெருஞ்சுடர் ஒன்றதின்**
**வேர் அறி யாமல்**
**விளம்புகின் றேனே.**

நிகளம் - நீளம், வேர் - நிலை.

**9**

ஆணவம் அழிவதற்கும், மனம் இறைவனைக் காட்டுவதற்கும் பாடல்கள் சாதனமாய் இருக்கின்றன.

பாடல்களைப் பாட, ஆடலும் வந்துவிடும். ஆனந்தமும் வந்துவிடும். தொண்டும் திருப்பணியும் செய்ய முடியாத காரியத்தைப் பாடல்கள் செய்துவிடுகின்றன. ஆனாலும் பாடல்களைப் பாடி இறைவனை அறிதிறவர்கள் அபூர்வமாகவே இருக்கிறார்கள். திருமூலரோ தன்னையே நொந்து சொல்லுகிற முறையில் அவர்களைப்பற்றிச் சொல்லுகிறார்.

**பாடவல் லார் நெறி**
**பாட அறிகிலேன்**
**ஆடவல் லார் நெறி**
**ஆட அறிகிலேன்**
**நாடவல் லார் நெறி**
**நாட அறிகிலேன்**
**தேடவல் லார் நெறி**
**தேட கில்லேனே**

நாடுதல் - பக்தி வெறியோடு தேடி அலைதல்

தேடுதல் - கண்டுபிடிக்க முயலுதல்

தேடகில்லேன் - தேடாமல் வெறுமனே காலத்தைக் கழிக்கிறேன்.

**10**

ஆணவம் காரணமாக இறைவனோடு சேரமுடியாமல் குவிக்கிறது உயிர். இறைவனோடு உயிர் சேர்ந்துவிட்டால் ஆணவம் இல்லாமலே போய்விடும்.

அனாதிமயமான ஆணவம் அழிவது லகுவான காரியம் அல்ல.

**பதி பசு பாசம்**
**எனப்பகர் மூன் றில்**
**பதியினைப் போல் பசு**
**பாசம் அனாதி**
**பதியினைச் சென் றணு**
**காப்பசு பாசம்**
**பதி அணு கில் பசு**
**பாசம் நிலா வே**

பசு பாசம் அனாதி - உயிரும் அனாதிதான். ஆணவமும் அனாதிதான்.

பசு பாசம் – உயிரோடு ஓட்டி நிற்கும் ஆணவம்.

பதி அணுகில் - இறைவனோடு நெருங்க.

பசு பாசம் நிலா - உயிரின் ஆணவம் உயிரைவிட்டுக் கழன்றோடி.விடும்,

**11**

இறைவனை நெருங்க நெருங்கத்தான் ஆணவநிலை அழிகிறது. ஆணவநிலை அழிவதற்கு இறைவன் காரணமாக இருப்பதால் இறைவனே ஆணவநிலையை அழித்துவிட்டதாகச் சொல்லுகிறார் திருமூலர். அப்படிச் சொல்வதில் எக்காளம், வெறி, அனந்தம் அவ்வளவும் சேர்ந்து கவி ஆகி விடுகிறது.

**களிம்பறுத் தான் எங்கள்**
**கண்ணுதல் நந்தி**
**களிம்பறுத் தான் அருட்**
**கண்விழிப் பித்து**

**களிம்பணு காத**
**கதிரொளி காட்டிப்**
**பளிங்கில் பவளம்**
**பதித்தான் பதியே,**

ஆனந்தமயமான அறிவு ஒன்றுதான். அதனுள் எப்படியோ ஆணவம் ஊடுருவி முளைத்துவிட்டது. ஆணவம் வளர வளர அறிவு வேறு ஆனந்தம் வேறு என இரண்டாய்ப் பிரிந்துவிட்டது. அறிவுக்கும் ஆனந்தத்திற்கும் இடையே நிற்கிற ஆணவம் அறிவோடு ஒட்டிக் கொள்கிறது. பசை போல ஒட்டிக்கொள்கிறது. இறையருள் தான் பசையை வழித்து விடுதலை புரிய வேண்டும்.

**12**

கண்ணுடிகளில் எத்தனையோவிதம். குவிந்த கண்ணுடி ஒன்றைக் கையில் வைத்துக்கொள்ள வேண்டியது. சூரியனுடைய ஒளி அதில் விழுந் ஊடுருவுமாறு காட்ட வேண்டியது. கண்ணுடிக்குக் கீழே சண்டோ, சருகோ, பஞ்சோ, தாளோ எது இருந்தாலும் அதில் தீப்பிடித்து வெந்துவிடும். சூரியனிடமிருந்து கிடைக்கிற உஷ்ணத்தை ஒருமுகப்படுத்தி வெளியிடுகிறது குவி ஆடி. (Convex lens).

சூரியனுடைய உஷ்ணம் வேறு ஒரு பொருளை எரிப்பதற்குக் குவி ஆடி கருவியாக உதவுகிறது. அவ்வளவுதான். இத்தகைய குவி ஆடி போன்றவற்றை சூரியகாந்தக்கல் என்று முன்னேர்கள் குறிப்பிட்டிருக்கிருர்கள்.

ஆணவம், மாயை, கன்மம் என்கிற மூன்று மலங்களையும் ஒழித்த பிறகுதான் இறைவனைச் சேர முடியும். மூன்று மலங்களையும் ஒழித்துப் பொசுக்குவது நாம் அல்ல. இறைவன் தான். இறைவனுடைய அருள் ஒளி மனம் என்கிற அரிய தத்துவத்தின் மூலமாக வெளிப்பட்டு மூன்று மலங்களையும் அழிக்கின்றது. எங்கும் நிறைந்த இறைவனுடைய அருள் ஒளி மனத்தின் வழியே வெளிப்பட மனம் சூரியகாந்தக் கல்லாக இருக்கின்றது.

**சூரிய காந்தமும்**
**சூழ்பஞ்சும் போலவே**
**சூரிய காந்தம்**
**சூழ்பஞ்சைச் சுட்டிடா**
**சூரியன் சந்நதி**
**யில்சுடும் ஆறுபோல்**
**சூரியன் தோற்றம்முன்**
**அற்ற மலங்களே.**

சூரியகாந்தக்கல் பஞ்சை எரித்துவிடாது. எரிப்பது சூரியன்தான். எரிப்பதற்குக் கருவியாக இருக்கிறது சூரியகாந்தக்கல்.

## குரு தரிசனம்

**13**

ஆழத்தில் போனமாத்திரத்தில் நீரின் ஆழம் தெரியாது போய்விடுகிறது. அதுபோல மனம் என்கிற தத்துவத்திற்குள் போகவும் ஆணவம் இல்லாமல் போய் விடுகிறது. அழிந்துவிடவே செய்கிறது.

ஐந்து புலன்களும் பொய்யறிவு என்கிற ஆணவத்தைப் பிடித்துத் தொங்குகி ன்றன. ஆணவம் மனத்திற்குள் போகும்போது ஐந்து புலன்களும் கூடவே செல்கின் றன. மனத்திற்குள் பொய்யறிவு அழிய அழிய ஐந்து புலச் செயல்களும் அழிந்து விடுகின்றன.

உண்மை அறிவாகிய மனத்திற்குள் பொய்யறிவாகிய ஆணவம் இறங்கிக் கரைந்தபின்பு இறைவனைக் காணமுடிகிறது. அவனோடு கலந்துவிடவும் முடிகிறது.

**அறிவைம் புலனுட**
**னே நான்ற தாகி**
**நெறியறி யாதுற்ற**
**நீராழம் போல**
**அறிவறி வுள்ளே**
**அழிந்தது போல**
**குறிஅறி விப்பான்**
**குருபரன் ஆமே.**

அறிவு - பொய்யறிவாகிய ஆணவம்

நான்றது - தொங்கிக்கொண்டு இறங்குகிறது

நெறியறியாது - அழம், அகலம், திசை ஒன்றும் தெரியாமல்

அறிவுள்ளே அழிந்தது - மெய்யறிவிற்குள்ளே இறங்கி ஒன்றுமில்லாத நிலையை அடைவது.

அறிகிறது ஒவ்வொன்றும் எங்கும் நிறைந்த பரவஸ்துத்தான். அதைத் தன்னுடைய செயலாக எண்ணித் தடுமாறுகிறது ஆணவம். மெய்யறிவாகிய மனத் திற்குள் இறங்கவும் தடுமாற்றம் அழிந்துவிடும். உடனே சிவதரிசனமும் பேரின்ப நிலையும் வந்துவிடும்.

ஆணவத்தை மெய்யறிவுக்குள் இறக்கி அழிப்பதும் இறைவனுடைய செயல் தான் என்பதைக் குருபரன் குறி அறிவிப்பான் என்று தெளிவாகச் சொல்லி இருக்கிறது.

குருபரன் - மனம் என்கிற அரிய தத்துவம்.

குறி - இறைவனை

அறிவிப்பான்--காட்டுவான்.

**14**

மனத்திற்குள் ஆணவ அறிவு கரையக் கரைய உண்மை தெளிவாகத் தெரிந்துவிடும்.

அண்டபிண்ட சராசரங்கள் அவ்வளவும் இறைவன் தான் என்பதும், ஒவ்வொரு பொருளையும் அவனே இயக்கிக் கொண்டிருக்கிறன் என்பதும் தெளிவாகத் தெரிந்து விடும்.

**அளித்தான் உலகெங்கும்**
**தானான உண்மை**
**அளித்தான் அமரர்**
**அறியா உலகம்**
**அளித்தான் திருமன்றுள்**
**ஆடும் திருத்தாள்**
**அளித்தான் பேரின்பத்து**
**அருள்வெளி தானே.**

அமரர் - புல் பூண்டு முதலிய உயிர்வர்க்கங்களில் உள்ள தத்துவங்கள்

அறியா உலகம் - தத்துவங்களாகி அத்தத்துவங்களால் அறிய முடியாததுமாகி இருக்கிற நியதி தத்துவம்

திருமன்று - வஸ்துக்களாகிய நடன சபை

திருத்தாள் - எங்கும் நிறைந்த ஆனந்த நடனமாதிய நியதி தத்துவம்.

அருள்வெளி - மனமாகிய தத்துவம்.

பொருள்களாகவும், பொருள்களை இயக்கும் தத்துவமாகவும், தத்துவங்களுக் கெல்லாம் அகப்படாத பெருநீதியாகவும், அந்த நீதி கொலு வீற்றிருக்கும் ஆசனமா கவும் இருப்பது ஒரே பொருள்தான். இதைக் தெரிய வேண்டும்.

தெரிந்தவுடன் ஏற்படுகிற ஆனந்தமும், வியப்பும் பாடலில் அப்படியே துள்ளித் துள்ளி விழுந்திருக்கிறது. ஏங்கித் தவம்கிடந்த காரியம் கைகூடிவிட்ட பெருமிதமும், உற்சாகமும் பாடலில் நிறைந்து கிடக்கிறது. .

காதல் கண்ணேடு அனுபவித்த உண்மை. நாம் அனுபவிக்கிறதற்கும் அந்த உண்மை தேவைதான்.

**15**

ஒரு புல்லை எடுத்துக்கொண்டாலும் சரி, அளக்க முடியாத நட்சத்திரங்களை எடுத்துக்கொண்டாலும் சரி, ஒவ்வொரு பொருளும் சோதிக்கச் சோதிக்கத் தேய்ந்து அணுவாகிறது. அணுவில் பேதம் என்பதே கிடையாது.

அனுவைச் சோதித்துப் பார்த்தால்: அணு என்பதாக ஓர வஸ்து இல்லை என்று தெரிந்துவிடும் மின் அணு, காந்த அணு, கரு அணு என்றெ மிகமிக நுண்ணிய துகள்கள் அளவு கடந்த வேகத்தோடு சுழல்கின்றன. அவ்வளவு வேகத்தோடு துகள்கள் சுழலும் போது ஏற்படுகிற நிழல் வட்டம் தான் அணுவாகத் தெரிகிறது.

நிறம், குணம், உருவம் இல்லாத துகள்கள் அண்டங்களாகவும், பேரண்டங் களாகவும், கோடானுகோடி வஸ்துக்களாகவும் விளைந்திருக்கின்றன. விளைந்து கொண்டே இருக்கின்றன.

இறுதி அற்ற ஒரு தத்துவத்தின் திருவிளையாடல்தான் சகலமும் என்பது அணுமூலமாகக் கூடத் தெளிவாகி விட்டது. எங்கும் நிறைந்த ஒரே தத்துவத்தைப் பெரு வெளி, சிவபுரம் என்று சொல்லியிருக்கிறது.

--- ---- ---- ---- ---- ---- ---- ---- ---- ---- ----

இறுதியற்ற பேரானந்த வெளியில் உண்டான சலனம் (ஆனந்த நடனம்) கோடான கோடித் தத்துவங்களை உணடாக்கி ஒவ்வொன்றையும் முறைமையோடு கொண்டு செலுத்துகிறது. முறைமையில் உள்ள பெருநீதியையும் பெருங்கணக்கை யும், பேராற்றலையும் நியதி (அளி) என்று சொல்லியிருக்கிறது.

பெருவெளியின் பெருநீதி இருக்கிறதே அது அறிவு மயமானது. அதனுல் தான் அதை ஒளி என்றும் சொல்லியிருக்கிறது.

பசுவுக்கு வேண்டிய புல்லையும், புல்லுக்கு வேண்டிய மழையையும், மழைக்கு வேண்டிய நீராழங்களையும், நீராழம் கெட்டுப்போகாமல் இருப்பதற்கு வேண்டிய உப்புக் கலவையையும் (சமுத்திரம்) அந்தப் பெருநீதியின் ஞானம் அல்லவா வகுத்துக் கொடுத்திருக்றெது!

உண்மையை நம்மவர்கள் மிச்சம் சொச்சம் வைக்காமல் கண்டு தெளிந்தவர் கள். அப்படி எல்லாம் (கண்டு தெளிந்த காரணமாகத்தான் இறைவனைப் பரவெளி என்றும் பெரு நீதி (அளி) என்றும் பேரறிவு (ஒளி) என்றும் துணிந்து சொல்ல முடிந்தது.

இறைவனுக்குரிய பெருவெளியும், பெருநீதியும், பேரறிவும், மனத்திற்கும் உண்டு.

இறைவனோடு கலந்துவிடுவதென்றால் மனம் தனக்குள் இருக்கும் இறைவனோடு கலக்கிறது என்று பொருள்.

**வெளியில் வெளிபோய்**
**விரவிய ஆறும்**
**அளியில் அளிபோய்**
**அடங்கிய ஆறும்**
**ஒளியில் ஒளிபோய்**
**ஒடுங்கிய ஆறும்**
**தெளியும் அவரே**
**சிவசித்தர் தாமே.**

**குறிப்பு:-**

ஆகாயத்தில் எவ்வளவோ தூரத்திற்கு அப்பால் இரண்டு வகையான காற்று (பிராணவாயு, நீர்வாயு) ஒன்று சேர்கின்றது. இடி முழக்கங்களும், மின்வெட்டுக்களும் ஏற்படுகின்றன. லட்சோபலட்சம் முரசுகள் ஒலிக்க தீபங்கள் ஒளிவீச இரண்டு காற்றும் ஒன்று கூடுகிற சடங்கு நடை பெறுகிறது.

இறைவனும், மனமும் ஒரே இடத்தில் ஒன்றினுள் ஒன்றாக இருந்தாலும் ஊழி ஊழி காலமாய் ஒன்று கூடவில்லை. ஒன்று கூட ஆரம்பித்துவிட்டால் ஆனந்தக் கூத்தே உண்டாகிவிடும்.

அத்தகைய ஆனந்தக் கூத்தைத் திருமூலருடைய கவி அருமையாக வெளியி டுகிறது.

**16**

மனத்தோடு மனதாக ஒன்றி விட்டவர்கள் ஞானிகள். ஞானிகளுக்கு இறைவ னுடைய தரிசனமும், சித்தியும் மனம் வழியாகக் கிடைக்கிறது. இப்படியாக ஞானிகள் பெறுகிற சிவானுபூதியை, சிவானுபூதி பெறுகிற ஒடுக்க நிலையை, தூக்கம் என்று சொல்லுவதுண்டு.

**சோம்பர் இருப்பதும்**
**சுத்த வெளியிலே**
**சோம்பர் கிடைப்பதும்**
**சுத்த வெளியிலே**
**சோம்பர் உணர்வு**
**சுருதி முடிவிலே**
**சோம்பர் கண்டார் அச்**
**சுருதிக்கண் தூக்கமே**

சோம்பர் - (1,3,4) ஞானிகள். 2 ஞானம்.

சுத்த வெளி - மனம். உணர்வு - தியானம்.

சுருதி முடிவு - பேதமற்று ஒன்றான நிலை.

தூக்கம்-- இறைவனோடு கலந்த நிலை.

**17**

ஞானத் தூக்கத்தின் மூலம் பெறுகிற சிவானுபூதியை எப்படி வார்த்தைகளால் சொல்லமுடியும்?

**தூங்கிக் கண்டார்சிவ**
**லோகமும் தம்உளே**
**தூங்கிக் கண்டார்சிவ**
**யோகமும் தம்உளே**
**தூங்கிக் கண்டார்சிவ**
**போகமும் தம்உளே**
**தூங்கிக் கண்டார் நிலை**
**சொல்வ(து)எவ் ஆறே**

சிவலோகம் - இறுதி இல்லாத பேரானந்தமான பெரு வெளி.

சிவயோகம் - பெருவெளியில் நடக்கிற சலனம். அதாவது எல்லாமாய் இயங்கிக் கொண்டிருக்கிற ஆனந்த நடனம்.

சிவபோகம் - கட்டுகள் அவ்வளவையும் உதறி எறிந்து விட்டு அவனை அடைகிற கலப்பு நிலை.

## ஆம், பித்தனேதான்

**18**

நாமோ இறைவனுடைய ஆனந்த நடனம். ஆனாலும் நம்மால் உணரமுடியா மல் இருக்கிறது அந்த நடனம். இறைவனை உணரவேண்டுமானால் இறைவன்மேல் அன்பு செலுத்தவேண்டும். அன்பைச் செலுத்திக் கொண்டே இருக்கவேண்டும்.

**உம்பரில்க் கூத்தனை**
**உத்தமக் கூத்தனை**
**செம்பொன் திருமன்றுள்**
**சேவகக் கூத்தனைச்**
**சம்மந்தக் கூத்தனைத்**
**தற்பரக் கூத்தனை**
**இன்புற நாடிஎன்**
**அன்பில்வைத் தேனே.**

செம்பொன் திருமன்று - சிதம்பரம்

சம்மந்ததற்பரன் - நம்மோடு சம்மந்தப்பட்டவன்தான் இறைவன். ஆனாலும் தற்பரமாய்த் தனித்து நிற்பவன்.

இன்புற நாடி - ஆனந்தத்தோடு வழிபட்டு.

**குறிப்பு:-**

"என் அன்பில் வைத்தேனே"? என்று நயமாக முடிகிறது கவி. இறைவனை வேறெங்கும் பார்க்கமுடியாது. என்னுடைய இதயத்தில் அன்புகொண்டு மூடிவிட் டேன் என்று தொனிக்றெ தோரணை அற்புதமான கவிப்பாங்கு.

**19**

இறைவன் அன்புமயமாக இருக்கிறான். இறைவனுடைய அன்புதான் பேரண்டம் முழுவதையும் உண்டாக்கியது. அதே அன்புதான் அவைகளை வாழ வைத்துக் காப்பாற்றுகிறது. ஒவ்வொன்றையும் தன்னோடு சேர்த்துக் கொள்வதும் அதே அன்புதான்.

உயிர்களிடத்திலும் நிறைந்து இருக்கிறது அன்பு. இதயக்கிண்ணம் வழிய வழிய இறைவனால் கொடுத்து அனுப்பப்பட்டது அந்த அன்பு. அத்தகைய அன்பு உண்மையைக் காண மாட்டாமல் வீணே கொட்டப்படுகிறது. கிண்ணத்திலிருக்கிற வெள்ளி நாணயம் சிந்திவிட்டால் மறுபடியும் பொறுக்கிக் கொள்ளலாம். நெய்

சிந்திவிட்டால் எப்படி எடுத்து வைப்பது? அன்பு வெள்ளி நாணயம் அல்ல நெய் என்பதைத் தெரியவேண்டும்.

அன்பைப் பாழாக்கிவிடாமல் பேணி வளர்ப்பவர்கள் அன்பு மயமாய் தெய்வமயமாய் ஆவகிவிடுகிறுர்கள்.

**அன்பு சிவம் இரண்**
**டென்பர் அறிவிலார்**
**அன்பே சிவம் என்ப(து)**
**தாரும் அறிகிலார்**
**அன்பே சிவம் என்ப(து)**
**தாரும் அறிந்தபின்**
**அன்பே சிவமாய்**
**அமர்ந்திருந் தாரே**

**20**

அன்பு வளர வளர இறைவனையே சுருட்டி மடக்கிக் கக்கத்தில் வைத்துக் கொள்ளும். அவ்வளவிற்கு வளர்த்து விடவேண்டும் அன்பை.

**பொன்னைக் கடந்திலங்**
**கும்புலித் தோலினன்**
**மின்னிக்கி டந்து**
**மிளிரும்இ ளம்பிறைத்**
**துன்னிக்கி டந்த**
**சுடுபொடி க்குப்**
**பின்னிக்கி கவிகள்**
**பேரன்பு தானே**

துன்னிக்கிடந்த - பேதம் இல்லாமல் ஒன்றாய்க் கிடந்து.

சுடுபொடி - வெந்து நீறுகிற சாம்பலைப் பூசி.

ஆடிக்கு - நடனம் ஆடுகிற மூர்த்தியை,

**குறிப்பு:-**

“பின்னிக்கிடந்ததென் பேரன்பு” என்று கடைசி அடி நடனத்தில் வைத்துக் காட்டுகிறது அன்பை.

## ஆம், பித்தனேதான்

**21**

இறைவனை அடைந்துவிட ஆசையோடு நிற்கிறார் திருமூலர். ஆசை வெறியாகி திருமூலர் உள்ளத்தைப் பெண்ணுள்ளமாக மாற்றிவிடுகிறது.

சுற்றி இருப்பவர்களுக்கு இவ்வளவும் தெரியவா செய்யும்? தெரியாமல் ஏதேதோ சொல்லுகிறார்கள்.

**முத்தினில் முத்தை**
**முகிழ் இள ஞாயிற்றை**
**எத்தனை வானோரும்**
**ஏத்தும் இறைவனை**
**அத்தனைக் காணாது(து)**
**அரற்றுகின் றேனையோர்**
**பித்தன் இவன் எனப்**
**பேசுகின் றாரே.**

முத்தினில் முத்து - முத்தானது கருச் சுமத்து பெற்றெடுத்த முத்து எப்படி இருக்குமோ அப்படி இருப்பவன் என் நாயகன்.

அத்தன் - என்னை ஆளவருகிற தெய்வம்.

**குறிப்பு: -**

அவன் சகல தத்துவங்களுக்கும் எட்டாதவன், ஆனாலும் நிச்சயம் என்னை வந்து ஆதரிப்பான். அவனை எதிர் நோக்கி நான் காத்திருப்பதில் வியப்பென்ன இருக்கிறது?

எங்கும் நிறைந்த தெய்வத்தை, என்னைக் கலந்து மருவ வருகிற தெய்வத்தை நான் எதிர்பார்த்து நிற்கிறேன். மற்றவர்களுக்கு அந்த ‘அருமை எப்படித் தெரியும்’ என்கிற எக்காளம் கவியில் அருமையாய்ப் பேசுகிறது.

முத்தினில் முத்து, முகிழ் இள ஞாயிறு, அத்தன் என்கிற வார்த்தைகளில் நுட்பமாய் ஒலிக்கிறது காதல். நுட்பமான காதல் ஒலியை மோனையிலும் எதுகையிலும் வைத்துக் காட்டுகிறது கவி.

**22**

காதல் இன்பம் எவ்வளவுக்கு எவ்வளவு பெருகுகிறதோ அவ்வளவுக்கு அவ்வளவு லஜ்ஜை வந்துவிடும். பயமும் வந்துவிடும்.

ஒரு பெண் பாண்டியன் மேல் காதல் கொண்டு ஆசை வெறிக்கு உள்ளானவள். தனியாக இருக்கும் பொழுது பெண் தனக்குள்ளாக எப்படியெல்லாமோ திட்டம் போடு கிறாள். "அவன் வரட்டும் இதைப் பாக்கியில்லாமல் கேட்டு விடுகிறேன். கேட்டு ஒரு முடிவும் பண்ணிவிடுகிறேன்" என்று திட்டம் இடுகிறாள். ஆனால் பாண்டியனைக் கண்டு விட்டாலோ அவ்வளவும் மறைந்து விடுகிறது. பயமும் லஜ்ஜையும் குபீரென்று வந்து முகத்தையே குனியவைத்து விடுகிறது. இப்படி நடப்பது ஒருநாள் இருநாள் அல்ல, பலநாட்கள். பலமாதங்கள் என்றுகூடச் சொல்லிவிடலாம். இதை முத்தொள்ளாயிர ஆசிரியர் எடுத்துச் சொல்லுகிறார்.

**மாணார்க் கடந்த**
**மறவெம்போர் மாறனைக்**
**காணுக்கால் ஆயிரமும்**
**சொல்லுவேன், - கண்டக்கால்**
**பூணுகம் தா என்று**
**புல்லப் பெறுவேனோ**
**நாணோ(டு) உடன்பிறந்த**
**நான்.**

பாழாய்ப்போன லஜ்ஜை என்னுடன் வந்தா பிறந்து தொலைக்க வேண்டும் என்று கவியானது பெருமூச்சு விடுகிறது. பாண்டியனைக் கலந்துவிடத் திட்டம் போடுகிற என் சமர்த்தே சமர்த்து என்று ஒருபக்கம் சிரித்துக் கொள்ளவும் செய்கிறது கவி.

--- ---- ---- ---- ---- ---- ---- ---- ---- ---- ----

காரைக்காலம்மையார் உயர்ந்த பக்தி நிலையிலிருந்து பேசுகிறவர். இதயம் கரைந்து பரம்பொருளோடு கலந்து விடுகிற நிலையை அவர் எடுத்துச் சொல்லுவார்.

அவர் சொல்லுகிற ஒவ்வொன்றும் காதல் மயமாகவே ஒலிக்கும். காரைக்கா லம்மையாருடைய பக்தி காதல் ஒலியோடு பேசும்.

காதல் என்று சொல்லும்பொழுது அதில் தயக்கம், எக்காளம், மயக்கம் அவ்வளவும் ஊடாடிக் கலக்க வேண்டியதுதான்.

அப்படிக் கலந்துகிடக்கிற பாடல் ஒன்று.

**கண்ணாரக் கண்டும்என்**
**கையாரக் கூப்பியும்**
**எண்ணார எண்ணத்தால்**
**எண்ணியும்-- விண்ணார**
**எரியாடி என்றென்றும்**

**இன்புறுவன் கொல்லோ**
**பெரியானைக் காணப்**
**பெறின்.**

எத்தனை எத்தனையோ இன்பங்களுக்குப் பரம்பொருள் லக்ஷியமாய் இருப்ப தால் அதே பரம்பொருளிடத்து அத்தனை அத்தனை நாணம் உண்டாகிறது. நாணம் காதல் உள்ளத்தை அவ்வளவு குறிப்பாகக் காட்டுகிறது.

திருமூலர் பாடும் அப்படித்தான். தனித்து இருக்கும் பொழுது எப்படியெல்லா மோ நடந்து கொள்ள வேண்டுமென்று திட்டம் போடுகிறார். இறைவனுடைய வருகைக்காக.

**அன்புள் உருகி**
**அழுவன் அரற்றுவன்**
**என்பும் உருக**
**இராப்பகல் ஏத்துவன்**

இப்படியெல்லாம் மயங்கி உளைகிறார் திருமூலர். அதில் குறை ஒன்றும் இல்லைதான். ஆனால்

**என்பொன் மணியை**
**இறைவனை ஈசனை**

கண்டுகொண்டாலோ அவனைக் கூடி அணையவேண்டும், ஊடலும் கொஞ்சம் காட்டிக் கொள்ள வேண்டும். "உன்னுடைய போக்குச் சரியில்லை, ஜாக்கிரதை" என்று கொஞ்சம் அரட்டிவிடவும் வேண்டும் என்று முடிவுகட்டிக் கொள்ளவும் செய்கிறார் திருமூலர்.

**தின்பன் கடிப்பன்**
**திருத்துவன் தானே**

பாடல் முழுவதையும் பார்க்கலாம்.

**அன்புள் உருகி**
**அழுவன அரற்றுவன்**
**என்பும் உருக**
**இராப்பகல் ஏத்துவன்**
**என்பொன் மணியை**
**இறைவனை ஈசனைத்**
**தின்பன் கடிப்பன்**
**திருத்துவன் தானே**

தின்பன் - முதலில் பிகுப்பண்ணி விடக்கூடாது, அவனோடு கொஞ்சம் ஒட்டிக் கொள்ள வேண்டும். அப்படி ஒட்டிக்கொள்ள லஜ்ஜை வந்து தடுக்காமல் இருக்க வேண்டும்.

கடிப்பன் – ஒட்டி இருக்கும் நிலையோடு ஊடலும் காட்டவேண்டும்.

திருத்துவன் - பிறகு நம்முடைய அதிகாரத்தையும் கொஞ்சம் காட்டிவிட வேண்டும். ஆனால் ஒன்றுவது நடை பெறவேண்டுமே என்ன செய்வது என்று மயங்குகிறது கவி.

பாடல் அற்புதமான பாடல்.

**23**

திருவருளோடு கலந்துவிட்டால் திருவருள் ஒன்று தவிர வேறு இல்லை என்று தெரிந்துவிடும்.

தெரிந்ததை வெளியில் எடுத்துச் சொல்லிகிற பொழுது திருவருளின் அதிசயமும் தெரிந்துவிடும்.

அன்பினுடைய விசித்திரம்தான் அவ்வளவும்.

**கண்டேன் கமழ்தகு**
**கொன்றையி னன் அடி**
**கண்டேன் கரிஉரி**
**யான்தன் கழல் இணை**
**கண்டேன் கமல**
**மலர்உறை சேவடி**
**கண்டேன் கழல்(து) என்**
**அன்பினுள் யானே.**

கொன்றை - பேரண்டங்கள்

கரிஉரி -அண்டம்

கமலமலார் - சிருஷ்டி தத்துவம்

அடி - திருவருள்.

காதலை வைத்துப் பரம்பொருளையே பிடித்துவிடுகிறது கவி. உத்ஸாகமும், வெறியும், நான்கு எதுகைகளிலும் கம்பீரமாக விழுந்துள்ளன.

**24**

இதயத்திற்குள்ளிருக்கிற இருட்டு அவ்வளவையும் துரத்திவிட்டு இறைவனை எதிர்பார்த்து நிற்பது அன்பு ஒன்றுதான். அன்பினுடைய காரியத்தால், வீடே (இதயமே) எதிர்பார்த்து நிற்கிறது இறைவனை.

அண்டபிண்ட சராசரமாய் விளைந்து விம்மி நிற்கிற பரம்பொருளுக்கு அப்படி ஒரு இடமும் அப்படி ஒரு வரமும் இருந்தால் இறைவன் அங்கு வராமல் வேறு எங்கு போக முடியும்?

**கடலுடை யான்மலை**
**யான் ஐந்து பூதத்து**
**உடலுடை யான்பல**
**ஊழிதோ றூழி**
**அடல்விடை ஏறும்**
**அமரர்கள் நாதன்**
**இடம்உடை யார்நெஞ்சத்து**
**இல்லிருந் தானே.**

ஐந்து பூதத்து உடல் உடையான் - இறைவன் ஒருவன் தான் உண்மைப் பொருள். இறைவனுடைய வடிவம்தான் பஞ்ச பூதங்களும். அவைகளின் கலவைக ளில் ஏற்பட்ட சரக்குகளும்.

ஊழிகதோறூழி அடல்விடை ஏறும் - யுக யுகாந்தரமாக விம்மிக்கொண்டு வருகிற பாசம். அந்தப் பாசந்தான் சகல சக்திகளுக்கும் காரணபூதமாய் இருக்கிறது.

சகல சக்திகளுக்கும் காரணபூதமாய் இருக்கிற பாசம் அவனைச் சுமந்து கொண்டுதான் இருக்கவேண்டும்.

அமரர்கள் நாதன் - உயிர்வர்க்கங்களில் உள்ள சகல தத்துவங்களுக்கும் நாயகன்.

இடம் உடையார் நெஞ்சம் - இதயத்தை அவன் வந்து தங்குவதற்கு ஏற்ற இடமாக வைத்திருப்பவர்கள்.

இல் இருந்தான் - அவர்களுடைய இதயத்தையே கோயிலாகக்கொண்டு எழுந்தருளிவிட்டான். அவர்கள் சகதாக் கண்டு களிக்கிறார்கள் என்பது கருத்து.

"என்னுடைய இதயத்தில் அவன் வந்து தங்கிவிட்டான். அவனோடு கலந்து பேரானந்தத்தில் தோய்ந்துவிட்டேன் நான்" என்று சொல்வதில் அவ்வளவு வெட்கம்.

அதனுல் அன்புள்ளவர்கள் இதயத்தில் அவன் வந்து தங்குவான் என்று ஜாடையாகச் சொல்ல நேரிடுறெது. காதலின் நுட்பமான போக்கு அப்படி.

**25**

நாயகன் வந்து அருள்புரிகிருன். பிறகு போய்விடுகிருன். நாயகியின் இதயம், தேகம், அவ்வளவும் ஆனந்தத்தில் கரைந்துவிடுகிறது. அந்த ஆனந்தத்தைத் தமிழ் பாஷை உக்ஸாகமாக வெளியிடுவதைப் பார்க்கலாம்.

**ஒருவனு மேஉல(கு)**
**ஏழும்ப டைத்தான்**
**ஒருவனு மேஉல(கு)**
**ஏழும்அ ளித்தான்**
**ஒருவனு மேஉல(கு)**
**ஏழும்து டைத்தான்**
**ஒருவனு மேஉல**
**கோ(டு)உயிர் தானே.**

ஒருவனுமே - அவனே, அவனேதான்
ஏம் என்பது எண்ணல்ல, அளவற்றதை உணர்த்தும் ஒரு குறியீடு.

அருமையான காதல் உருவம் கொண்ட கவி. திருமூலர் தன்னுடைய அனுபவத்தை அப்படிக் காதல் ஒலியோடு வெளியிடுகிருர்.

--- ---- ---- ---- ---- ---- ---- ---- ---- ---- ----

## அறிவில்லாதவர்கள்

**26**

இறைவனைப் பார்ப்பதற்கு எத்தனையோ வாசல்கள் இருக்கின்றன. ஓவ்வொரு பொருளும் ஒவ்வொரு அணுவுமே அவனைக் காண்பதற்கு வைத்த வாசல்கள் தான்:

பொருள்களைப் பகுத்துணர்ந்து இறைவனைப் பார்க்கிற காரியம் அவ்வளவு உகந்தது அல்ல. பகுப்புணர்ச்சி அதிசயத்தை உண்டாக்கலாம். ஆனுல் அது இழுத்துக் கொண்டு போவது ஆணவ உலகத்திற்கு உள்ளேதான்.

ஆணவத்திற்கு அகப்படாமல் ஏகாந்தமாய் வாழுகிற இதயம் இருக்கிறதே அது ஒன்றுதான் இறைவனைத் தேடிப் போவதற்கு ஏற்ற சரியான வாசல். இதயம் வாசலா கவும் இருக்கிறது. இறைவன் தங்கியிருக்கிற கோயிலாகவும் இருக்கிறது.

ஆனால் அத்தகைய இதய வாசலை மூடி இருக்கிற ஆணவக் கதவைத் திறக்கிறவர்கள்தான் இல்லை. இதைப் பற்றி சிவவாக்கியர் சொல்வதை முதலில் கவனிப்போம்.

**அண்டவாசல் ஆயிரம்அ**
**கண்டவாசல ஆயிரம்**
**ஆறிரண்டு நூறுகோடி**
**ஆனவாசல் ஆயிரம்**
**இந்தவாசல் ஏழைவாசல்**
**எம்பிரான்இ ருந்தவாசல்**
**ஏக போகம் ஆனவாசல்**
**யாவர்காண வல்லரே**!

அடடா! இறைவனைப் பார்ப்பதற்கு வாசல் நம்மிடம் இருக்கிறது. நமக்கே அது பட்டாப்போட்டுக் கொடுக்கப் பட்டிருக்கிறது. நமக்கு உதவி செய்யக் காத்துக் கொண் டிருக்கிறது அந்த வாசல். நமக்காக இறைவனைச் சுமந்து கொண்டும் இருக்கிறது. அப்படி இருந்தும் மனிதர்களுக்குக் கொடுத்து வைக்கவில்லையே!

இனித் திருமூலரைப் பார்ப்போம்.

**உள்ளத் தொருவனை**
**உள்ளூறு சோதியை**
**உள்ளம்விட் டோரடி**
**நீங்கா ஒருவனை**
**உள்ளமும் தானும்**
**உடனே இருக்கினும்**
**உள்ளம் அவனை**
**உருவறி யாதே**

தானும் - இறைவனும்
உடனே - சேர்ந்து
உள்ளம் - இதயம்
உரு அறியாது - பார்க்கமுடியாமல் தவிக்கிறது.
பார்க்க முடியாதபடி ஆணவம் அலைக்கழித்து விடுகிறது.

**குறிப்பு:-**

சேர்ந்து கிடந்துதான் என்ன பலன் என்கிற ஏக்கம் கவியில் தெளிவாய்ப் பேசுகிறது.

**27**

ஆணவக் கதவைத் திறக்கவேண்டியதுதான். அனந்த மயமான தெய்வ தரிசனம் நமக்குக் கிடைத்துவிடும். தெய்வ தரிசனத்தைக் கழுமணியாறு என்று சொல்வதுண்டு.

கழுமணி ஆறு என்கிற ஆனந்த வெள்ளத்தில் முங்கலாம், முக்குளிக்கலாம், நீந்தி நீந்தி விளையாடலாம். வினையும் வினைப்பயனும் கழுமணி ஆற்றில் கரைந்து விடும்.

ஆனால் மனிதர்கள் என்ன செய்கிறார்கள்? ஆணவத்தை அப்படியே விட்டு விட்டு உடம்பையும் சுமந்து கொண்டு காசிக்கும் ராமேஸ்வரத்திற்கும் போகிறார்கள். குற்றாலத்திற்கும் பாவநாசத்திற்கும் சென்று ஏறி இறங்குகிறார்கள். உள்ளே இருக்கிற ஆணவ அழுக்கை அருவியும், கடலும் எப்படிக் கழுவமுடியும் என்பது அவர்களுக் குத் தெரியவில்லை.

**உள்ளத்தின் உள்ளே**
**உள பல தீர்த்தங்கள்**
**மெள்ளக் குடைந்துநின்(று)**
**ஆடார் வினைகெடப்**
**பள்ளமும் மேடும்**
**பரந்து திரிவரே**
**கள்ள மனம உடைக்**
**கல்வியி லோரே.**

## கவி செய்கிற காரியம்

**28**

ஆணவத்தை விலக்கித் திருவருளோடு கலப்பதற்கு எத்தனையோ கருவிகள் இருக்கின்றன. நந்தவனம், பூமாலை முதலிய கருவிகள் பல இருக்கின்றன. ஆனால் கவியாகிய கருவி ஒன்றுதான் ஆணவத்தை அடியோடு ஓழித்துக்கட்ட முடியும். திருவருளோடு பூரணமாகக் கலந்துவிட கவி ஒன்றுதான் துணை.

கவி என்றால் வார்த்தைகளும் வார்த்தைகள் போடுகின்ற தாளங்களும்தான். நட்டுவனே வார்த்தைக்குள்ளிருந்து தாளம் போடுகிறான் கவியில். வார்த்தை பொருளைக் காட்டுகிறது. அத்துடன் வார்த்தைகளைக் கையாண்ட மனிதர்களின் இதயம், துடிப்பு, ஆசை அவ்வளவையும் காட்டிவிடுகின்றது. அது காரணமாகத்தான் வார்த்தைகள் உணர்ச்சமோடு இதயத்தை ஓட்ட முடிகிறது.

--- ---- ---- ---- ---- ---- ---- ---- ---- ---- ----

உண்மையைத் தெதரிந்தவர்களுக்கு ஒவ்வொரு வஸ்துவும் ஒவ்வொரு அணுவும் பரம் பொருளாகவே படும். பரம் பொருளைப் பார்க்குந்கோறும் அவர்கள் தம்மையும் மறந்து அரகர அரகர என்று கதறி விடுகிறுர்கள். அரகர என்ற வார்த்தை ஆயிரம் ஆயிரம் அண்டுகளாக ஆயிரம் ஆயிரம் மகான்களால் மெய்மறந்து உச்சரிக்கப்பட்டு வந்திருக்கிறது. மகான்களுடைய பக்தி, ஆனந்தம், இதயம் அவ்வளவும் அரகர என்கிற வார்த்தைக்குள் நிறைந்திருக்கின்றன. மகான்கள் அவ்வளவுபேரும் அந்த வார்த்தைக்குள் இருக்கிறுர்கள் என்றால் குற்றம் இல்லை.

அரகர என்ற வார்த்தையை ஓதினுல் ஒளி பிறக்கும், தெளிவு பிறக்கும், ஆனந்தம் பெருகும். தெய்வ தரிசனமும் தெய்வக் கலப்புமே ஏற்பட்டுவிடும். எப்படி:-

**அரகர என்ன**
**அரியதொன் றில்லை**
**அரகர என்ன**
**அறிகிலர் மாந்தர்**
**அரகர என்ன**
**அமரரு(ம்) ஆவர்**
**அரகர எனன**
**அறும் பிறப்(பு) அன்றே**

என்ன - என்று சொல்லிச் சொல்லி உருஏற்ற
அறும் - ஒழிந்துவிடும்.

**29**

அரகர என்கிற வார்த்தையே பிறப்பை அறுத்துவிடும் என்றுல் கவியைப் பற்றிக் கேட்கவா வேண்டும்?

கவியை விளக்கு என்று சொல்கிறுர் திருமூலர் .

**விளக்கினை ஏற்றி**
**வெளியை அறிமின்**
**விளக்கினின் முன்னே**
**வேதனை மாறும்**
**விளக்கை விளக்கும்**
**விளக்குடை யார்கள்**
**விளக்கின் விளங்கும்**
**விளக்கவர் தாமே.**

விளக்கினை - பக்திமயமான பாடல்களை

ஏற்றி - பாடிப்பாடி

வெளியை - இறைவனை

விளக்கன்முன் - பாடலைப் பாடி அனுபவிக்கிறபொழுது

விளக்கை - எத்தகைய தத்துவத்தாலும் விளக்கிக் காட்டமுடியாத பரம்பொருளையே

விளக்கும் - தெளிவாய்க் காட்டிவிடக் கூடிய

விளக்குடையார்கள் - கவிஞார்கள். அத்தகைய கவிஞர்கள் பாடிய

விளக்கின் - பாடல்களில் தான் .

விளக்கவர் - பரம் பொருளானது.

விளங்கும் - தங்கி இருக்கிறது. கவி ஒன்றில்தான் பரம்பொருளைப் பார்த்து அனுபவிக்க முடியும்.

பல நூற்றாண்டுகளுக்கு முன்பே பக்திமயமான பாடல்களைப் பாடிப்பாடி ஆனந்தம் அடைந்திருக்கிறார்கள் தமிழ் மக்கள். பாடல்களின் ஆனந்தத்திற்கு நிகராக எதுவும் இல்லை என்று முடிவுகட்டி. இருக்கிறார்கள். அவர்களின் உறுதியும் தெளிவும் அப்படிப் பாடலில் தெரிகிறது.

**30**

இறைவனுக்குப் பெயர் விளக்கு; கவிக்குப் பெயரும் விளக்குத்தான். ஆணவத் தை ஒழித்து ஆனந்தத்தைப் பெருக்குவது கவி ஒன்று இறைவன் ஒன்று. ஆனால் கவியை வைத்துத்தான் இறைவனைப் பார்க்கலாம். இது சம்மந்தமாக மாணிக்கவாச கர் சொல்வதைக் கேட்போம்.

**சொல்லற்(கு) அறியானைச்**
**சொல்லிச் சிவனடிக்கீழ்ச்**
**சொல்லிய பாட்டின்**
**பொருள் உணர்ந்து - சொல்லுவார்**
**செல்வர் சிவபுரத்தின்**
**உள்ளார் சிவனடிக்கீழ்ப்**
**பல்லோரும் ஏத்தப்**
**பணிந்து**

பாடல்களைப்பாட ஐம்புலன்களின் பொருள் தெரியும். அதாவது ஐம்புலன்களும் பாடல்களோடு சேர்ந்து இறைவனுக்குத் தொண்டுபுரியும். பிறகு உடல்தத்துவம் தெரியும். அதாவது உடல்தத்துவம் முழுவதும் ஆணவக் கட்டிலிருந்து விடுபட்டு ஆனந்த நிலைக்குத் துடித்துவிடும். பிறகு மனம் என்கிற அரிய பெரிய தத்துவமே தரிசனம் கொடுத்துவிடும். மனம் காட்சிக்குப் புலனாகிவிட்டால் உயிர்த்தத்துவம் அதாவது பரம்பொருளே கெரிந்துவிடும்.

பரம் பொருளோடு தோய்வதற்குப் பாடல்கள்தான் கருவி. அதனால்தான் "வாய் கோபுரவாசல்" என்று திருமூலர் சொல்லுகிறார்.

**உள்ளம் பெருங்கோயில்**
**ஊன உடம்பு ஆலயம்**
**வள்ளல் பிரானார்க்கு**
**வாய்கோ புரவாசல்**
**தெள்ளத் தெளிந்தார்க்குச்**
**சீவன் சிவலிங்கம்**
**கள்ளப் புலன் ஐந்தும்**
**காளர மணிவிளக்கே.**

வள்ளல் பிரான் - அருள் மயமான பரம்பொருள் .

தெள்ளத் தெளிந்தார் - ஞானிகள்.

காளாமணி - கண்டாமணி

விளக்கு - நந்தா விளக்கு

பாடல்களைப் பாடப்பாட புலன்கள் ஒடுங்கும். வழி காட்டவும் செய்யும் என்பதை மணி என்றும் விளக்கு என்றும் குறிப்பிட்டிருக்கிறது.

கவிதையின் மூலம்தான் தெய்வ தரிசனம் பெறலாம் என்பதைப் பாடல் அற்புதமாக எடுத்துச் சொல்லுகிறது. ஆலயம் ஒன்றைக் கட்டிநிற்கிறது பாடல். அருமையான கவிக் கோவில், கல்கோவில் அல்ல.

**31**

பரம் பொருளில் ஆனந்த நடனம்தான் வஸ்துக்கள். வஸ்துக்கள் இறைவனைச் சுட்டிக்காட்ட முடியும். ஆனால் வஸ்துக்களைத்தான் இறைவன் என்று சொல்லிவிட முடியாது.

**பூதக்கண் ணாடியில்**
**புகுந்திலன்.**

என்று சொல்லிவிடுகிறுர் திருமூலர்.

இனி இடம் என்கிற தத்துவத்தோடு வஸ்து சேர்ந்து இயங்கும்பொழுது காலம் என்பதாக ஒன்று தோன்றுகிறது. தோற்றம் வெறும் தோற்றம்தான். அத்தகைய வெறும் தோற்றத்தில் நடைபெறுகிற அவ்வளவு காரியங்களும் இறைவனுடைய காரியங்கள்தான். ஆகவே காலத்தோடு ஒன்றுபட்டு இருக்கிறுன் இறைவன் என்று சொல்லி விடலாம்.

**"போதுளன்"**

இனி அறிவுக் தத்துவத்தின் (சயன்ஸின்) கொடுக்கைப் பிடித்துக்கொண்டு எவ்வளவு தூரம் போனுலும் சரி இறைவன் புலனுகமாட்டான். இறைவனுடைய நடனத்தில் விளைந்த பொருள்களும், பொருள்களின் கலவைகளும்தான் அறிவின் மூலம் புலனுகும்.

**"வேதக்கண் ணுடியில்**
**வேறே வெளிப்படும்"**

ஆனுல் இறைவனுடைய திருவருளை அனுபவித்து அதையே தியானித்துக் கொண்டிருக்கிற மகான்கள் இருக்கறுர்களே அவர்களுடைய மனதில் அவன் புலனுவான்.

**நீதிக்கண் ணுடி**
**நினைவார் மனத்துளன்**

அத்தகைய இறைவனை நேருக்கு நேராகப் பார்த்துச் சேர்வதற்குப் பாடல்களைப் பாடவேண்டும். பாடல்களைப் பாடப் பாடப் பாடல்களில் உள்ள நாதாந்த சலனத்தில் இறைவனுடைய நடன ஓசை கேட்கும். இறைவனே காட்சி தருவான், தோய்ந்து விடுவதும் எளிது.

**கீதக்கண் ணுடியில்**
**கேட்டுநின் றேனே**

பாடல் முழுதும் பார்க்கலாம்.

**பூதக்கண் ணாடியில்**
**புகுந்திலன் போதுளன்**
**வேதக்கண் ணாடியில்**
**வேறே வெளிப்படும்**
**நீதிக்கண் ணாடி**
**நி வாரா மன த்துளன்**
**கீதக்கண் ணாடியில்**
**கேட்டுநின் றேனே**

பூதக்கண்ணாடி:- ஒவ்வொரு வஸ்துவும் இறைவனைக் காட்டுகிற கண்ணாடிகள் தான். கண்ணாடியின் மூலம் பார்க்க முடியுமே தவிர கண்ணாடிக்குள்ளாகவே இறைவன் வந்து தங்குவான் என்று எதிர்பார்க்கலாகாது.

போது - காலம்; காலம் என்பது செயலை ஓட்டி நடை பெறுகிறது.

வேதம் - சயன்ஸ் ஆராய்ச்சி

வேறே வெளிப்படும் - வெறும் ஆராய்ச்சியாகவே முடியும். திருவருளின் அற்புதம் வெளிப்படாது.

நீதி - எங்கும் நிறைந்த நியதித்துவம்.

நினைவார் - ஞானிகள், கவிஞர்கள்

அத்தகைய ஞானிகளின் அனுபவமும் இதயமும் கவிகளாக வந்துள்ளன.

கீதக்கண்ணாடி - கவிகள்,

கேட்டு நின்றேன் - அதில் இறைவனுடைய பெருமையைக் கேட்க முடிந்தது. பார்க்க முடிந்தது. இறைவனும் நானும் ஒன்றாகத் தோய முடிந்தது.

--- ---- ---- ---- ---- ---- ---- ---- ---- ---- ----

## சந்தேகம் இல்லை நிச்சயம்தான்

**32**

பக்திமயமான பாடல்களைப் பாடி அதை எடுத்துச் சொல்லுகிறவர்களின் மனத்திற்குள் பரம்பொருள் வந்து கூடிவிடும். பிறகு மனத்தைவிட்டு பரம்பொருள் நகழாது. மனத்திலுள்ள ஆணவ அழுக்கைக் கழுவுவதின்மூலம்" "நான் இங்குதான் இருக்கிறேன்" என்று பரம்பொருள் பறை சாற்றவும் செய்யும்.

யாருக்கும் தெரியாமல் மனத்திற்குள்ளே ஒளிந்து இருப்பதால் பரம்பொருளைக் "கள்ளத் தலைவன்" என்று குறிப்பிடுகிறார்.

**உள்ளத்(து) ஒடுங்கும்**
**புறத்துளும் நான்எனும்**
**கள்ளத் தலைவன்**
**கமழ்சடை நந்தியும்**
**வள்ளல் பெருமை**
**வழக்கம்செய் வார்கள்தம்**
**அள்ளல் கடலை**
**அறுத்துநின் றானே.**

கமழ்சடை - சிவமணங்கமழும் சடை

வள்ளல் பெருமை - பரம்பொருளின் அருள்மயமான பெருநீதியை

வழக்கம் செய்வார் - கவிகளின் மூலம் சதா வெளிப்படுத்திக் கொண்டே இருக்கிற மகான்கள், அவர்களின் மனத்தில் இருக்கிற

அள்ளல் கடலை - ஆணவ மயக்கமாகிய சமுத்திரத்தைத் தானே

அறுத்து நின்றான் - துளிகூட மிஞ்சாதபடி வற்றவைத்து அந்த இடத்தில் தன்னை நிறைத்துக் கொண்டான். உள்ளிருந்து கொண்டே புறத்தார்க்குப் புலனாகிறான் இறைவன். எல்லாம் கவியை நாடிவந்த காரணமாகத்தான்.

பாடல் அற்புதமான பாடல்.

"கள்ளத் தலைவன் கமழ்சடை நந்தி" என்று காதல் அனுபவத்தை வைத்து அருமையாகச் சொல்லியிருக்கிறது ஆனந்தத்தை. அதாவது நாயகனுடைய அருளைப் பூர்ணமாகப் பெற்ற இன்பானுபூதியை.

"அள்ளல் கடலை அறுத்து நின்றானே" என்று சொல்வதில் உத்ஸாகமே உண்டாகிவிடுகிறது

## சந்தேகம் இல்லை நிச்சயம்

**33**

இறைவனிடம் காணிக்கையாகக் கொடுப்பதற்கு ஏற்ற சொத்து நம்மிடம் ஒன்றுதான் இருக்கிறது. அது ஆணவம் தான். ஆணவம் நீங்கலாக மற்றவை முழுவதும் இறைவனுக்குச் சொந்தமானவை.

ஆனால் இறைவனை ஆனந்தப்படுத்துவதற்கோ நம்மிடம் பெரிய செல்வம் இருக்கிறது. அதுதான் கவியாகிய செல்வம். கவி ஒன்றுதான் இறைவனுக்கு நாம் கொடுக்கிற காணிக்கை, ஆராதனை, அகாரமும் கூட.

**வேட்டவி உண்ணும்**
**விரிசடை நந்திக்குக்**
**காட்டவும் நாம்இலம்--**
**காலையும் மாலையும்**
**ஊட்டவி ஆவன**
**உள்ளம் குளிர்விக்கும்**
**பாட்டவி காட்டுதும்**
**பாலவி யாமே**

வேட்டவி (வேட்டம் + அவி) - ஆணவமாதிய காணிக்கை ஒன்றினை மட்டும்

உண்ணும் - ஏற்றுக்கொள்கிற

காட்டவும் நாம் இலம் - வேறு ஒன்றைக் கொடுப்பதற்கு நம்மிடம் ஒன்றும் இல்லை. கொடுப்பதாக எண்ணுவதற்கு கூட நாம் தகுதியற்றவர்கள்.

காலையும் மாலையும் - எந்த வேளையானாலும் சரி

உள்ளம் குளிர்விக்கும் - மனதையே கரைத்து கனிவிக்கக் கூடிய

பாட்டு அவி - கவியாகிய அவிசுதான்

ஊட்டு அவி - இறைவனுக்கு என்னால் ஊட்டக்கூடிய ஆகாரம்

பால் அவி ஆம் - பாடலாதிய உணவுதான் என்னிடம் வந்து விரும்பிப் பெறுகிற அமிர்தமும் ஆகும்.

**34**

ஞானிகள் எங்கும் நிறைந்த திருவருள் ஒன்றைத்தான் சதா தியானித்துக் கொண்டிருக்கிறார்கள். அதே திருவருளைத்தான் அவர்கள் சொல்லிச் சொல்லி ஆனந்தம் அடைகிறார்கள்.

பரம்பொருளோ அத்தகைய ஞானிகளோடு கலந்து ஞானிகளைக் தன்வயம் ஆக்கிக் கொள்கிறது. ஞானிகள் பரம்பொருளைத் தமக்குள் தாங்கித் திரிவதால் "நடமாடும் கோவில்" என்று சொல்லப்படுகிறார்கள்.

நாமும் நடமாடும் கோவிலை வலம் வந்து பணிய வேண்டியதுதான். பணிந்து அக்கோவிலுள் இருக்கும் பரம்பொருளைக் கூடிக் கலக்க வேண்டியதுதான்.

**நினைவதும் வாய்மை**
**மொழிவதும் அல்லால்**
**கனைகழல் ஈசனைத்**
**காண அரிதாம்**
**கனைகழல் ஈசனைக்**
**காண்குற வல்லார்**
**புனைகழல் நீர்கொண்டு**
**போற்றவல் லாரே.**

வாய்மை - உண்மை. உண்மை ஒன்றையே தியானித்து அதையே உச்சரிக்க முடியா தவர்கள்.

கனைகமல் - நடனமயமான பரம்பொருளின் திருவருளை

காண அரிது--உணரமுடியாது

காணகுறவல்லார் - நேருக்கு நேராகக் கண்டு அனுபவிக்கக் கூடியவர்களின்

புனைகழல் - திருவடிகள். ஞானிகளின் திருவடிகளும் அருள் மயமானதுதான்.

நீர் கொண்டு போற்ற - நம்முடைய கைகளால் நீர் கொண்டு பணிவிடை செய்யத் தக்க அருள் மயமானவை.

**35**

ஞானிகளுக்குள்ளே வெளிப்படையாகத் தங்கியிருக்கிறன் இறைவன். இந்த உண்மையைத் தெரிந்துவிட வேண்டும். அப்படித் தெரிந்த பிறகு இறைவனுக்குச் செய்யவேண்டிய பணிவிடை, திருப்பணி, பக்தி அவ்வளவையும் ஞானிகளுக்குச் செய்ய வேண்டியதுதான்.

ஞானிகளுக்குச் செய்கிற ஒவ்வொரு பணியும் இறைவனைப் போய்ச் சேர்ந்து விடும். ஞானிகளைக் கருதாமல் கோவில்களில் கொண்டுபோய்ச் சேர்க்கிற காரியங் களை இறைவன் ஏற்றுக் கொள்ள மாட்டான் என்றுதான் சொல்ல வேண்டியதிருக்கி றது.

**படம்ஆடும் கோயில்**
**பகவற்(கு)ஒன் றீயின்**
**நடம்ஆடும் கோயில்**
**நம்பர்க்கங்(கு) ஆகா**
**நடம்ஆடும் கோயில்**
**நம்பர்க்கொன் றீயில்**
**படம் ஆடும் கோயில்**
**பகவற்க(து) ஆமே.**

படம் ஆடும் கோயில் - கோபுரம்; சித்திரம்; சிற்பம் முதலியவை நிறைந்த அலயம்.

நம்பர்க்கு - இறைவனுக்கு

ஆகா - உதவாது

ஆம் - உதவும்.

**36**

இறைவனுடைய பேருள்ளத்தில் உண்டாகிற கனவு தான் வஸ்துக்கள். அளத்தற்கரிய பேரண்டங்களும் சரி, அணுக்களின் நுண்ணிய துகள்களும் சரி அவ்வளவும் கனவு தான். இறைவனுடைய கனவுதான்.

ஒவ்வொரு வஸ்துவும் (வஸ்துவாக இருப்பதுடன்) ஆகாரமாகவும் இருக்கிறது

--- ---- ---- ---- ---- ---- ---- ---- ---- ---- ----

தேங்காயை மண்ணுக்குள் ஊன்றி வைக்கிறோம். மண்ணுக்குள்ளிருந்து இலை வருகிறது. பிறகு தூரும் வேரும் சேர்ந்த மரமே வந்துவிடுகிறது. தேங்காயாகிய வித்து மரமாக முளைத்து வரும்பொழுது ஆகாரமாக இருப்பதும் அதே தேங்காய் (பருப்பு)தான்.

கோழி முட்டைக்குள் இருக்கிற தண்ணீர் எப்படியோ மூக்கும், முழியும், பயமும், சந்தோஷமும் கொண்ட குஞ்சாக வந்துவிடுகிறது. அப்படி வருகிற கோழிக் கருவுக்கு ஆகாரமும் அதே தண்ணீரோடு தண்ணீராய் வைக்கப்பட்டிருக்கிறது. இறைவனுடைய கனவு வஸ்துக்களாக விளைந்து வஸ்துக்களுக்கு ஆகாரமாகவும் விளைந்துவிட்டது. ஆகாரமோ வஸ்துவின் ஒவ்வொரு அணுவிற்குள்ளும் கருவாக இருக்கிறது.

**உன்னும் அளவில்**
**உணரும் ஒருவனை**
**பன்னும் மறைகள்**
**பயிலும் பரமனை**
**என்னுள் இருக்கும்**
**இளையா விளக்கினை**
**அன்ன மயம் என்று**
**அறிந்து கொண்டேனே**

உன்னும் அளவில் - நினைத்த மாத்திரத்தில்

பன்னும் மறைகள் பயிலும் பரமன் - அடியார்கள் கனிந்து பாடிய பாடல்கள்தான் இறைவனுக்கு ஆகாரம். அதை இறைவன் சதாப் பாடிக்கொண்டே அனுபவிக்கிறன்.

இளையாவிளக்கு - மங்காத ஜோதி; பரம்பொருள்.

உண்பதும் உண்ணப்படுவதும் ஒன்றுதான். அடடா இதை நானல்லவா தெரிந்து கொண்டேன் என்கிற அதிசய பாவம் ஹாஸ்யத்தோடு பேசுகிறது. அது "அறிந்து கொண்டேனே" என்ற முழக்கத்தோடு விழுகிறது. அற்புதமான பாடல்.

இறைவன் நமக்குள்ளிருந்து ஒவ்வொன்றையும் எண்ணுகிறன். அப்படி அவன் செய்கிற காரியங்களுக்குக் கருவி தான் ஆணவ அறிவு. கருவியாக இருக்கிற ஆணவ அறிவு நான் எண்ணுகிறேன், நான் சிந்திக்கிறேன், நான் முடிவு கட்டுகிறேன் என்று மயங்குகிறது. மயக்கமாகிய திரை உள்ளிருக்கும் பேரொளியையே மறைத்து விடுகிறது. திரை விலகினல் உண்மை தெளிவாய்த் தெரியும் என்பது கருத்து.

**துஞ்சும் போதும்**
**சுடர்விடும் சோதியை**
**நெஞ்சுளே நின்று**
**நினைப்பிக்கும் நீதியை**

என்று அப்பர் சுவாமிகள் சொன்னதும் இதைக் தெளிவு படுத்தத்தான்.

**37**

நியூட்டன் என்கிற பேராசிரியர், விஞ்ஞான உலகத்திற்குப் பல அரிய உண்மை களை உதவியவர். அவ்வளவையும் தம்முடைய வீட்டில் ஒரு சிறிய அறையில் இருந்துதான் அவர் கணிப்பது. வானவெளியில் சஞ்சரிக்கிற நட்சத்திரங்கள், கிரகங்கள் இவைகளின் சக்தி, இயக்கம், வேகம் அவ்வளவையும் கணக்குப் போட்டுப் பார்க்கிறவர் நியூட்டன்.

கணக்கிட்டு அளந்து பார்க்கிற நியூட்டன் அந்தந்த வஸ்துக்களோடு அப்படி அப்படியே தோய்ந்துவிடுவார். நியூட்டன் தோய்ந்து கலந்துவிடுகிறுர் என்றல் பசி. தாகம் இவைகளே மறந்து, தாம் வாழுகிற ஜட உலகத்தையும் மறந்து விடுகிறுர். தம்மையே மறந்து விடுகிறுர் என்பது பொருள்.

ஆராய்ச்சியை முடித்துக்கொண்டு ஜட உலகத்திற்குள் எப்பொழுது வருகிறுர் என்று சொல்லமுடியாது. ஒருநாள் அல்ல பலநாட்கள் தொடர்ச்சியாக அந்த ஒளி உலகத்திற்குள் நியூட்டன் சஞ்சரிப்பதுண்டு.

ஆராய்ச்சியை முடித்துக்கொண்டு நியூட்டன் வருகிற நேரம் எதுவோ, அது தான் அவருக்குச் சாப்பாடு தேவையான நேரம். அந்த நேரம்தான் நியூட்டன் தம்மு டைய லோகாயத காரியங்களேக் கவனிக்கிற நேரம். அப்பொழுது தான் அவர் சாப்பி டுவது.

ஒரு தடவை நியூட்டனேப் பார்க்கவந்த இரண்டு நண்பர்கள் நியூட்டனுடைய மேஜைமேல் இருந்த உணவைச் சாப்பிட்டுவிட்டு வராந்தாவில் பேசிக்கொண்டிருந் தார்கள். ஆராய்ச்சி முடிந்தவுடன் உணவுத்தட்டைப் பார்த்தார் நியூட்டன். உடனே கடகடவென்று சிரித்துவிட்டார். நண்பர்கள் நியூட்டனிடம் சிரித்ததற்குக் காரணம் என்ன வென்று கேட்டனர். நியூட்டன் சொன்னார், “எனக்கு வந்த சாப்பாட்டை முன்பே நான் சாப்பிட்டுவிட்டேன். சாப்பிட்டது ஞாபகமில்லாமல் மறுபடியும் தட்டைப் போய்ப்பார்த்தேன்'. நியூட்டன் இப்படிச் சொல்லவும் நண்பர்கள் அதிசயித்து விட்டார்கள். அடடா, தியான நிலேயில் இருந்தல்லவா நியூட்டன் உண்மையோடு தோய்ந்து விடுகிறுர் என்று அதிசயித்துப் போனுர்கள்.

--- ---- ---- ---- ---- ---- ---- ---- ---- ---- ----

இறைவனுடைய செயல்தான் சகலமும் என்று தியான நிலேயோடு உண்மையை ஒட்டுகிறவர்கள் ஞானிகள். ஞானிகள் தியான நிலேயில் இருக்கிற வரை அவர்களுக்குப் பசி, தாகம் முதலிய லோகாயத உணர்வு கொஞ்சங்கூட ஏற் படாது. தியான நிலேயிலிருந்து ஞானிகள் இறங்கிவருகிற நேரத்தைப் பகல் என்று சொல்வதுண்டு.

அத்தகைய ஞானியின் பெருமையை உணர வேண்டும். உணர்ந்து அவர்களு க்கு வேண்டிய பணிகளே மனமுவந்து செய்யவேண்டும். சமாதி நிலே கலேந்தவுடன் ஞானியின் பசியை ஆற்றுவதற்கு ஒரு பழம் கொடுத்தாலே போதும். உள்ளன்போடு மகான்களுக்குக் கொடுக்கிற காணிக்கையின் மதிப்புக் காணிக்கையின் அளவைப் பொறுத்தது அல்ல. மகானின் அளவைப் பொறுத்தது.

அதாவது மகானேப்போன்று தெய்வத்தன்மை வாய்ந்ததுதான் அவர்களுக்குக் கொடுக்கிற ஒரு பழம் என்று சொல்லிவிடலாம். அதுமாத்திரமா, இறைவனுக்கு

ஆயிரம் ஆலயங்கள்கட்ட, ஆயிரம் கட்டளைகளை ஏற்படுத்துகிறதைக் காட்டிலும் உயர்ந்தது ஞானிகளுக்கு நாம் செய்கிற திருப்பணி.

**அகரம் யிரம்**
**ஆரியற்(கு) ஈயில்என்**
**சிகரம் ஆயிரம்**
**செய்து முடிக்கில்என்**
**பகரும் ஞானி**
**பகலஉண் பலத்துக்கு**
**நிகர்இலை என்பது**
**நிச்சயம் தானே.**

அகரம் - விளக்குக்கு என்றும், மண்டகப் படிக்கு என்றும், ஆலயங்களில் எழுதி வைத்திருக்கிற கட்டளைகள். ஆலயங்களைப் புதுக்குவது நந்தவனம் போடுவது போன்ற திருப்பணிகளும் அதைச் சேர்ந்ததுதான்.

ஆரியன் - அருமையானவன்; தத்துவங்களைக் கடந்து காட்சிக்குப் புலனாகாமல் இருக்கிற பரம்பொருள்.

சிகரம் - கோபுரம் கட்டுவது, மண்டபம் கட்டுவது போன்ற திருப்பணிகள்.

பகரும் ஞானி - எல்லாம் இறைவனுடைய செயல்தான், வேறு ஒன்றும் இல்லை என்ற உண்மையோடு ஒன்றிச் சமாதி நிலையில் நிற்கும் அடியார்கள் .

பகல் - சமாதி நிலை கலைந்த நேரம்.

பலம் - பழம்.

அடியார்களை வழிபட்டு உண்மையை அறிவது ஆலயங்களில் போய் வழிபாடு செய்து உண்மையை அறிவதை விட லகுவானது.

இதைத் தெளிவுபடுத்துவதற்காகத்தான் மூன்று கவிகளும் ஒரே தொடராக வந்திருக்கின்றன. “பகவற்க(து) ஆமே,” “அறிந்து கொண்டேனே” என்பவற்றோடு, “நிச்சயம்தானே” என்பதையும் சேர்த்துப் பார்க்கவேண்டும்,

## குடங்குடமாய்ப் பால் சொரியும்

**38**

பூமிக்குள்ளே ஆழமான இடங்களில் தங்கமயமான அணுக்கள் கொடி கொடியாய்ப் படர்ந்து பின்னிக்கொண்டிருக்கின்றன. தங்கப்பொடி அணுக்களை ஒன்று கூட்டிக் குவித்து உருக்கி அடித்த உடன் தங்கக்கட்டி பாளம் பாளமாய் வந்து

விடுகின்றன. தங்கக் கட்டியை மறுபடியும் உருக்கி சரப்பளி என்றும், மோதிரம் என்றும், கொலுசு என்றும், காப்பு என்றும், நகை செய்து விடுகிறோம். ஒவ்வொரு நகையும் தங்கம் தான், அதாவது தங்க அணுக்கள் தான். தங்க அணுக்களைப் பிரித்துப் பார்த்தாலோ, தங்கம் என்றோ, வெள்ளி என்றோ, இரும்பு என்றோ சொல்ல முடியாது. நுண்ணிய தூசி (கோண்)கள் மிஞ்சுகின்றன. தூசி (கோண்)களைப் பிரித்தால் அதைவிட நுண்ணியதூசி (துகள்)கள்தான் மிஞ்சுகின்றன. துகளையும் தாண்டிப் போனால் எங்கும் நிறைந்த பரவெளி, சிவபுரம் ஒன்றுதான் மிஞ்சும். தங்கத்திற்கு தேர்ந்த கதிதான் ஒவ்வொரு வஸ்துவிற்கும் என்பதை மறந்துவிடக்கூடாது.

--- ---- ---- ---- ---- ---- ---- ---- ---- ---- ----

இறைவனே அணுவுக்குள் அணுவாக இருக்கிறான். இறைவனுடைய கனவு தான் துகள்களாய், கோண்களாய், அணுக்களாய்த் தடித்து வந்திருக்கின்றன. அணுக் கூடுகளின் தொகுதிதான் வஸ்துக்கள். அறுகம்புல்லின் நரம்புகள் முதல் பேரண்டங்க ளின் தொகுதிகள் முடிய ஒவ்வொன்றும் அணுக்கூடுகளின் தொகுதிதான். நாம், உயிர், உடல், உணர்ச்சி அவ்வளவும் அதே அணுக்கூடுகளின் தொகுதி தான்.

உயிர், உணர்ச்சி, உடல் ஆகிய தத்துவங்கள் மூன்றும் வெறும் தோற்றங்கள் தான், ஆதாரம் அற்ற வெறும் தோற்றங்கள் தான் என்பதைப் பார்த்தோம். அத்தகைய வெறும் தோற்றங்களை நம்முடைய பொய்யறிவாகிய கருவியைக்கொண்டு ஆராய்ந்து பார்ப்பது அதைவிட ஆதாரமற்ற செயலாகும். அதாவது ஏமாற்றுக்கு ஒரு ஏமாற்று என்று ஆகிவிடும்.

அப்படியிருக்க உயிரை அளக்கிறது, கண்டு பிடிக்கிறது என்பது எப்படி உண்மையாகும்? வெளிச்சம் வெளிச்சத்தை எப்படி அளக்கமுடியும்? வெளிச்சத்திற் குள் வெளிச்சம் அடங்கவேண்டியதுதானே?

**அணுவில் அணுவினை**
**ஆதிப்பி ரானை**
**அணுவில் அணுவை**
**ஆயிரம் கூறிட்டு**
**அணுவில் அணுவை**
**அணிகவல லார்க்கு**
**அணுவில் அணுவை**
**அணுகலும் ஆமே.**

அணுவில் அணுவை - அணுவிற்குள்ளிருக்கும் சிறு பகுதியாகிய கோண் என்பதைத் தானே.

ஆயிரம் கூறு இட்டு - எண்ணில்லாத சிறு பகுதிகளாக மேலும் பகுத்தால் துகள்கள் மிஞ்சும்.

அணுவில் அணுவை அணுக - மிஞ்சிய துகள்களை மேலும் சோதித்துப் பார்க்க.

வல்லார்க்கு - உண்மை அறிவுள்ள ஞானிகளுக்கு

அணுவில் அணுவை - ஒவ்வொரு அணுவிற்குள்ளும் இருக்கிற உயிர் தத்துவத்தை.

அணுகலும்ஆம் – பார்க்க முடியும். (அதாவது)

அணுவில் அணுவை - உயிர்த்தத்துவமானது.

ஆதிப்பிரான் – எங்கும் நிறைந்த பரம் பொருள்தான் என்பதைத் தெரிந்து அனுபவிக்க முடியும்.

உண்மைப் பொருளாகிய பரம்பொருளை அறியவேண்டும் என்கிற ஆசையை விட்டுவிட்டுப் பொய்த் தோற்றங்களை ஆராய்வது வேடிக்கையான காரியந்தான். அனால் இந்த வேடிக்கையான காரியமும் சிலசமயம் பலனளித்தாலும் அளிக்கலாம். அதாவது இந்தப் பொய் ஆராய்ச்சியே நுணுகி நுணுகி கடைசியில் பரம்பொருளைக் காட்டினாலும் காட்டி விடும். இருந்தாலும் முகத்தைச் சுற்றி மூக்கைப் பிடிக்கிற கணக்குத்தான்.

உத்ஸாகம் வருகிறதென்றால் பாஷையில் மடக்கும். சுழட்டும் மேலும் மேலும் அழுத்தம் கொடுத்துவிடும். உண்மை தெரியாமல் எல்லோரும் இப்படி அலைகிறார்களே என்று பாஷையே உத்ஸாகப்பட்டுப் பேச ஆரம்பித்து விட்டால் மடக்குகளுக்கும், சுமட்டுகளுக்கும் கேட்கவா வேண்டும்? “அணுவில் அணுவினை,” “அணுவில் அணுவை, என்றெல்லாம் தெளிவாய் ஒலிக்கின்றன மடக்குகள், சுழட்டுகள்.

**39**

இறைவன் ஒருவன் தான் எங்கும் நிறைந்து இருக்கிறான். வஸ்துக்களும் வஸ்துக்களில் தோன்றுகிற பேதங்களும் வெறும் மாயைதான். நம்முடைய அறியாமைதான்.

**அணுவில் அவனும்**
**அவனுள் அணுவும்**
**கணுவற நின்ற**
**கலப்ப(து) உணரார்**
**இணை இலி ஈசன்**
**அவனஎங்கும் ஆகித்**
**தணவற நின்றான்**
**சராசரம் தானே**

கணுவற - வேற்றுமை இல்லாமல் ஒன்றே ஒன்றுக, தணவுஅற - தேடுவதற்கு வேறு ஒன்றும் இல்லை என்று சொல்லும்படி தான் ஒருவனே ஆகி.

**40**

உயிர் என்பது என்ன, அது எப்படி இருக்கிறது என்றெல்லாம் அடித்துக் கொள்கிறது, ஆணவ அறிவு. உண்மை அறிவுக்கு அப்படி ஒன்றும் கவலை இல்லை.

**மேவிய சீவன்**
**வடிவது சொல்லிடின்**
**கோவின் மயிர் ஒன் று**
**நூறுடன கூறிட்டு**
**மேவிய கூறது**
**ஆயிரம் ஆயினுல்**
**ஆவியின் கூறுநூ**
**றுயிரத்(து) ஒன்றே**

மேவிய - இடைவெளி இல்லாமல் எங்கும் நிறைந்திருக்கின்ற

கோ - பசு; பசுவினுடைய ரோமத்தை ஆயிரம் கோடி பகுதிகளாக வகுத்தால் ஒரு பகுதியின் கன பரிமாணம் உயிரின் கனபரிமாணமாக இருக்கலாம். ஒரே ரோமத்தின் கன பரிமாணத்தில் ஆயிரம் கோடியில் ஒரு பகுதி என்பது எங்கும் நிறைந்த வெட்ட வெளிதான். அதாவது பரம்பொருளே தான். பரம்பொருளைப் பரம்பொருள் என்று தெரியாமல் இந்த ஆணவ அறிவு என்னென்ன கூத்துக்கள் செய்கின்றன என்கின்ற ஆங்காரம் ஹாஸ்ய பாவத்தோடு பேசுகிறது. மேவிய, கோவின், ஆவியின், நூறு, ஆயிரம், நூறுயிரம் என்கிற சுகமான ஒலிகள் உருண்டு உருண்டு வருவதும் ஒன்றே என்று முடிவதும் அதிசய பாவத்தை அப்படியே வாய்விட்டுச் சொல்லிவிடுகின்றன.

**41**

நம்முடைய துயரங்கள் அவ்வளவும் நாம் வேறு, இறைவன் வேறு என்று மயங்குகிற ஆணவம் தான். ஆணவம் கமன்றுவிட்டால் நாமே இறைவன் என்று தெரிந்து விடுகிறோம். அதாவது இறுதி அற்ற பேரானந்தமே அய்விடுகிறோம்.

**சீவன் எனச்சிவன்**
**என்னவே இல்லை**
**சீவ னுர் சிவ**
**னுரைஅ றிகிலர்**
**சீவ னுர்சிவ**

**ஞரைஅ றிந்தபின்**
**சீவ ஞர்சிவ**
**ஞய்இட் டிருப்பரே.**

இறைவன் வேறு உயிர் வேறு அல்ல. இரண்டும் ஒன்று தான் என்பதைப் பின் மூன்று அடிகளிலும் வார்த்தைகள் நறுக்கு நறுக்கு என்று தெறித்து விழுவதே தெரிவிக்கின்றன. கவி அற்புதமான கவி. வார்த்தைகள் வெட்டுண்டு வெட்டுண்டு பிணைவதின் மூலம் தாளத்தில் அபாரமான வேகம் உண்டாகி நடனமாகிறது. விஷய த்தில் தெளிவும் பிரகாசமும் ஏற்படுகின்றன.

**42**

நான் நான் என்று மயங்கியது பொய் என்பதும் உண்மையில் நான் என்பது இறைவன் என்பதும் தெரிந்துவிட்டால் பரம்பொருளோடு சேர்ந்துவிடலாம். உண்மை தெரிவது தான் சிவஞான நிலை.

**உய்யவல் லார்கட்(கு)**
**உயிர்சிவ ஞானமே**
**உய்யவல் லார்கட்(கு)**
**உயிர்சிவ தெய்வமே**
**உய்யவல் லார்கட் (கு)**
**ஒடுக்கம் பிரணவம்**
**உய்யவல் லார் அறிவு**
**உள்ளறி வாமே**

உய்யவல்லார் -இறைவனேடு கலந்தவர்கள், ஞானிகள்.

உயிர்சிவஞானம் - ஞானிகள் உயிர் என்று ஒன்று இல்லை என்பதைக் தெரிந்து விட்டார்கள், எங்கும் திறைந்த சிவ ஞானம்தான் உயிர் என்று தெரிந்துவிட்டார்கள்.

ஒடுக்கம் - பரம்பொருளும் உயிரும் ஒன்றுதான் வேறல்ல என்பதை அறிந்த ஞானம்.

பிரணவம் - அந்த ஞானம் ஆணவம் நீங்கிப் பரம்பொருளோடு சேர்த்து வைக்கிறது.

உள்ளறிவு - ஆணவம் நீங்கிய மெய்யறிவு அதாவது தெய்வ அறிவு.

**43**

தத்துவங்களைப் படித்தும் சயன்ஸைக் கற்றும் உணர்ந்த பெரியவர்கள் வஸ்து க்களின் தரம், குணம், இயக்கம் அவ்வளவையும் எடுத்துச் சொல்கிருர்கள். அவர்களைக் கற்றவார்கள் (கற்ற பசு) என்று சொல்வதுண்டு. வஸ்துக்களின்

இயல்புகளை எவ்வளவுதான் (உண்மையாக) எடுத்துச் சொன்னாலும் கற்றவர் (கற்றபசுக்)கள் எல்லாம் வெறும் வறட்டுப் பசுக் (புலவர்)கள் தான்.

இனி இறைவனைக் கண்டுபிடிப்பதாக உடலையும், உள்ளத்தையும் வருத்திக் தவநிலையைக் கையாளுகிறவர் (கொற்றபசுக்) களோ உண்மையைப் பார்க்க முடியாமல் தவிக்கிறார்கள். காரணம் நாம் வேறு, இறைவன் வேறு என்னும் எண்ண த்தோடு இறைவனைக் கண்டுபிடிக்கத் தவ நிலையை ஆரம்பித்திருக்கிறார்கள். கட்டாந்தரையைப் புல் வெளி என்று மேய்ந்த தவப்(கொற்ற) பசுக்களும் வறட்டுப் பசுக்கள் தான்.

உண்மை நிலையை அடைந்தவர் (உற்றபசுச்)கள்தான் ஆனந்தமான பசுக்கள். அத்தகைய ஞானப்பசுக்கள் ஆனந்தப் பாலைக் குடம்குடமாகச் சொரிந்து கொண்டே இருக்கும்.

**கற்ற பசுக்கள்**
**கதறித் திரியினும்**
**கொற்ற பசுக்கள்**
**குறிகட்டி மேயினும்**
**உற்ற பசுக்கள்**
**ஒருகுடம் பால்போதும்**
**மற்றைப் பசுக்கள்**
**வறள்பசு தானே**

கதறித்திரியினும் - இறைவனைப்பற்றி வியாக்கியானங்களும் பேருரைகளும் எவ்வளவு எடுத்து முழங்கினாலும்.,

கொற்ற பசுக்கள் - யோகிகள்

குறிகட்டி மேய்தல் - தனியான குறியும் காரணமும் இறைவனுக்கு வகுத்து இறைவனை அடையத் தவத்தில் நிற்பது.

உற்ற பசுச்கள் - பதியை அடைந்த பசு, சீவன் முக்தார்கள்

குடம்பால் - பாலைக் குடம் குடமாக

போதும் - சொரிந்துகொண்டே இருக்(கும்)க முடியும்;

பாடலைப் பாடப்பாட பசுக்களாய்த் தெரிந்துவிடும். மடியில் முட்டுகிற கன்றுக ளுக்கு வாலைச் சுழற்றிக் கொண்டு சில பசுக்கள் பாலைப் பொழிகின்றன. பல பசுக்கள் மலட்டுப் பசுக்களாக வெறித்துக் கலைந்து ஓடுகின்றன.

--- ---- ---- ---- ---- ---- ---- ---- ---- ---- ----

## கல்லும் பிளக்கும்

**44**

உண்மையை அறிந்த ஞானிகளிடம் வினையோ, வினைப் பயனோ தங்காது. ஞானிகளைவிட்டு அவைகள் நழுவி ஓடி விடும்.

**தன்னை அறிந்திடும்.**
**தத்துவ ஞானிகள்**
**முன்னை வினையின்**
**முடிச்சை அவிழ்ப்பார்கள்**
**பின்னை வினையைப்**
**பிடித்துப் பிசைவார்கள்**
**சென்னியில் வைத்த**
**சிவன் அரு ளாலே**

தாமாகவே ஓடிவிடும் வினைப்பயன்களை ஞானிகள் முடுக்குவதாகச் சொல்வது அற்புதமான கவிப்பாங்கு, வினைப் பயன்கள் ஞானியினை விட்டுத் தலைதெறிக்க ஓடுகிற வேகத்தையும், பயத்தையும் முடிச்சை அவிழ்ப்பார்கள், பிடித்துப் பிசைவார் கள் என்கிற வார்த்தைகள் அழகாய் எடுத்துச் சொல்கின்றன.

**45**

ஐம் புலன்களும் தங்களுடைய காரியங்களை ஒதுக்கி விட்டுக் கொஞ்சம் அடங்கி இருக்க வேண்டும். உடனே மெய்யறிவு ஒளிகாட்டும். ஒளிகாட்டுகிற மெய்யறிவை மேலும் மேலும் தூண்டவேண்டும். அதாவது இறைவன் ஒருவன்தான் என்கிற உண்மையை வளர்க்கவேண்டும். அப்படியே பரம்பொருளோடு கலந்து இறுதியற்ற ஆனந்த நிலை பெறுவதுதான் முடிபாக இருக்கும்.

**ஆனைகள் ஐந்தும்**
**அடக்கி அறி(வு) என்னும்**
**ஞானத் திரியைக்**
**கொளுவி அதனுட்புக்(கு)**
**ஊனை இருள்அற**
**நோக்கும் ஒருவற்கு**
**வானகம் ஏற**
**வழிஎளி தாமே**

ஊன் - ஜடம்; இருள் அற - வஸ்துக்கள் என்கிற மயக்கம் நீங்கி, நோக்கும் ஒருவற்கு - பரம் பொருள் ஒன்றையே பார்க்கிற ஞானிக்கு.

**46**

ஐம்புலன்களையும் தட்டிக்கொடுத்து எட்டாத வெளியில் இழுத்துக்கொண்டு போகிற ஆணவத்தை மனத்திற்குள் இறக்கிவிட வேண்டும். எவ்வளவு தூரம் இறங்கிச் சுற்ற முடியுமா அவ்வளவிற்கு ஆணவ அறிவை விட்டுவிட வேண்டும். காமம், வெகுளி, மயக்கம் என்கிற மூன்று மலங்களை அப்படி அப்படியே ஒதுக்கி விடவும் வேண்டும். அப்படியானுல் ஜடத்துவம் மாய்ந்து ஒவ்வொரு வஸ்தவும் பரவெளியாகக் காட்டி தரும்.

**வெல்லும் அளவில்**
**விடுமின் வெகுளியை**
**செல்லும் அளவும்**
**செலுத்துமின் சிந்தையை**
**அலலும் பகலும்**
**அருளுடன் தூங்கினுல்**
**கல்லும் பிளந்து**
**கடுவெளி யாமே**

சிந்தையை - அணவத்தை மனத்திற்குள்
அருளுடன் - பரம்பொருள் ஒன்றையே
தூங்கினுல் - தியானித்து ஒன்றினுல்
கல்லும் - ஜடம் மாய்ந்து
கடுவெளி - பரவெளி, எங்கும் நிறைந்த ஆனந்தவெளி.

--- ---- ---- ---- ---- ---- ---- ---- ---- ---- ----

## தாடைதான் மடுவல்ல

**47**

மனதிற்குள் ஆணவ அறிவை இறக்கி அழித்து விடுவது தான் உண்மையான கல்வி. உண்மைக் கல்வியைக் குரு என்றும் ஆணவத்தைக் குருடு என்றும் சொல்லி இருக்கிறது.

**குருட்டினை நீக்கும்**
**குருவினைக் கொள்ளார்**
**குருட்டினை நீக்காக்**
**குருவினைக் கொள்வர்**
**குருடும் குருடும்**
**குருட்டாட்டம் ஆடிக்**
**குருடும் குருடும்**
**குழிவிழும் ஆறே.**

இரண்டு குருடர்கள் பந்தயம் போட்டுக் கண்ணும்பூச்சி விளையாண்ட கணக்குத்தான், தத்துவ ஆராய்ச்சிகளும், குணதோஷ விமர்சனங்களும்.

**48.**

திருநெல்வேலியை அடுத்து ரோடில் கைகாட்டி மரம் ஒன்று நிற்கிறது. ““மதுரை 92 மைல்’ என்று கைகாட்டிப் பலகையில் எழுதியிருக்கிறது. இதை ஒறு ஆசாமி பார்த்தான். “என்ன இது “மதுரை 92 மைல்” என்று எழுதியிருக்கிறது. ஆனுல் கைகாட்டியின் பலகை எழுத்தோடும் எண்ணேடும் நின்று விட்டதே, மதுரை வரைக்கும் (92 மைலும்) பலகை செல்லவில்லையே” என்று ஆசாமி உளைந்து விடுகிறன். அத்தகைய உளைச்சல் ஒவ்வொரு மனிதனிடத்திலும் ஏற்படுகிறது. உண்மையை அறியப் புறப்படுகிற இடத்தில் உண்டாகிவிடுகிறது.

மதுரைக்குப்போகிற பாதையைக் கைகாட்டி எடுத்துக் காட்டுகிறது. இதே பாதையில் இன்னும் எத்தனை மைல் போகவேண்டும் என்பலைதயும் குறித்துக் காட்டுகிறது. ஆசாமி அந்த வழியில் போகவேண்டும், அவ்வளவு மைலைக் கடக்க வேண்டும், மதுரைபோவதாக இருந்தால். கைகாட்டி ஆசாமியை மதுரைக்குத் தூக் கிக்கொண்டு போய்விடாது.

--- ---- ---- ---- ---- ---- ---- ---- ---- ---- ----

பரம்பொருள் எங்கும் நிறைந்து வியாபித்திருக்கிறது. பரம்பொருளை அடைகிற வழி இன்னதென்றும் சொல்லி இருக்கிறது. இப்படி என்றும் குறித்திருக்கிறது. அப்படி எல்லாம் குறித்திருக்கிற ஏடு (நூல்)கள் பரம்பொருளைக் காட்டிவிடமுடியாது. ஏடுகள் பரம்பொருளைக் காட்டும் என்று காத்திருப்பது கைகாட்டி மதுரைக்குக்கொண்டுபோய் விடும் என்று காத்திருக்கிற மாதிரி.

**காட்டும் குறியும்**
**கடந்தவர் காரணம்**
**ஏட்டின் புறத்தில்**
**எழுதிவைத் தென்பயன்**

பரம்பொருளைச் சேர்வதற்கு வழி ஆணவத்தை மனத்திற்குள்ளே இறக்கி விடுவது ஒன்றுதான். இரவு, பகல் என்கிற வேறுபாடில்லாமல் மனத்திற்குள்ளே ஆணவம் சென்று சென்று தேய வேண்டும். ஆணவத்தை அப்படித் தேய்த்து விடுகிற கல்வி தான் குருவாக இருந்து பரம்பொருளோடு சேர்த்து வைக்க முடியும்.

**கூட்டும் குருநந்தி**
**கூட்டிடின் உண்டு.**

குருவைக் கூட்டிக்கொள்ளாமல், அதாவது மனத்திற்குள் ஆணவத்தை இறக்காமல் ஆணவத்தைக் கொண்டு உண்மையை அளக்க வருகிற கல்வி பொய்க் கல்வி தான். அத்தகைய பொய்க் கல்வியால் விபரிதந்தான் விளையும். எப்படி என்று பார்க்கலாம்.

நோயாளி ஒருவன் எலும்பும் தோலுமாக வைத்தியரிடம் வந்து முறையிட்டான். வைத்தியர் சொன்னார்: "அதிகாலையில் எழுந்திருந்தவுடன் ஆட்டுக் கிடை (மந்தை)க்குப் போய் ஆட்டின் மடுவில் வாய்வைத்து மூன்று மாதம் ஆட்டுப்பாலைச் சாப்பிடவேண்டும். பின்பு என்னிடம் வா, உடல் நன்கு தே றிவிடும்." நோயாளி ஆட்டு மந்கையைப் பார்த்திராதவன். ஆடும் இன்னதென்று தெரியாதவன். விசாரித்து அதிகாலையில் மந்தைக்குப் போய்ச் சேர்ந்தான். ஆடுகள் இருந்தன. மூன்று மாதமும் வாய் வைத்துச் சூம்பிச் சூம்பிக் குடித்துவந்தான். ஆனால் உடல்நிலை அப்படித்தான் இருந்தது. வைத்தியரிடமும் குறிப்பிட்ட நாளில் மறுபடியும் வந்து சேர்ந்தான். வைத்தியருக்கு ஒன்றும் புரியவில்லை. "நான் பார்க்க நீ மடுவில் பால் குடிக்க வேண்டுமென்று" நோயாளியை வைத்தியர் அழைத்துப் போனர்.

மந்தையை நெருங்கினவுடன் நோயாளி வேகமாய் ஓடிப்போய் வாய் வைத்துச் சப்புச் சப்பென்று சப்பினன். பிறகு வைத்தியர் பக்கத்தில் வந்து சேர்ந்தான். வைத்தியருக்கோ சிரிப்புத் தாங்க முடியவில்லை. "அப்பனே நீ வாய் வைத்துச் சப்பியது மடு அல்ல. கடாவின் தாடை. அதோ இருக்கிறதே மடி, நாளை முதல் அதில் வாய்வைத்துப் பால் குடி" என்று உண்மையை எடுத்துச் சொன்னர் வைத்தியர்.

தாடையில் வாய்வைத்துப் பால் குடித்த நோயாளியை ஒத்தவர்கள் தான் ஆணவத்தைக் கருவியாக வைத்து அறிவை (பரம்பொருளை) அளக்கிறவர்களும்.

**ஆட்டின் கழுத்தில்**
**அதர்கிடந்(து) அற்றே**

பாடல் முழுவதையும் பார்க்கலாம்.

**காட்டும் குறியும்**
**கடந்தவர் காரணம்**
**ஏட்டின் புறத்தில்**
**எழுதிவைத் தென்பயன்**
**கூட்டும் குருநந்தி**
**கூட்டிடின் உண்டன்றேல்**
**ஆட்டின் கழுத்தில்**
**அதர்கிடந் தற்றே**

ஏட்டின் புறம் - பனை ஓலையின் முதுகு.

கூட்டும் குரு - ஆணவத்தை மனத்திற்குள்ளே திருப்பிவிடுகிற திருவருள்.
திருவருளை நந்தி என்று சொல்வது மரபு.
ஆடு - ஆட்டுக்கடா.
அதர் - நாடி.

## மேய்ப்பவர் வேண்டும்

**49**

மனத்திற்குள் ஆணவம் இறங்கிக் கரையக் கரைய நான் என்கிற நிலை அழிந்துவிடும். எல்லாம் அவனே என்கிற நிலை வந்துவிடும். நான் என்கிற ஆணவ நிலை தேயத்தேய பரம்பொருளோடு ஒன்றிவிடுகிறோம். பரம்பொருளாக ஆகிவிடு கிறோம்.

**நான் என்றும் தான்என்றும்**
**நாடினேன் நாடலலும்**
**நான் என்று தான் என்று**
**இரண்டில்லை என்பதை**
**நான் என்ற ஞான**
**முதல்வனே நல்கினான்**
**நான என்று நானும்**
**நினைப்பொழிந் தேனே**

நான் என்ற ஞான முதல்வன் - எல்லாம் தானாக இருந்து விளையாடுகிற இறைவன்.

நல்கினான் - தெளிவுப்டுத்தி விட்டான்.

நான் என்று - இறைவன் நீங்கலாக எதுவும் இல்லை என்பகைத் தெரிந்தபிறகு "நான் வேறு" என்னும் ஆணவத்தை.

நானும் நினைப்பு ஓழிந்தேன் - நானும் இறைவனோடு சேர்ந்து அழிந்து விட்டேன்.

**50**

பரம்பொருள் இருப்பது மனம் என்கிற வீட்டிற்குள், மனம் என்கிற வீடு பரம்பொருளைக் காட்டிவிடாத வகையில் மனத்தைக் கலக்கிக் கொண்டிருக்கிறது ஆணவம். ஆணவத்தை ஒடுக்கி மனத்திற்குள் திருப்பி விட்டால் இறைவனை மனத்திற்குள் பார்க்கமுடியும். மனத்தை ஆணவம் கலக்க விடாதபடி பார்த்துக் கொள்ளவேண்டும். அவ்வளவுதான் நாம் செய்யவேண்டியது.

**சிந்தைய(து) என்ன**
**சிவன் என்ன வேறில்லை**
**சிந்தையின் உள்ளே**
**சிவனும் வெளிப்படும்**
**சிந்தை தெளியத்**
**தெளிய வல்லார்கட்கு**
**சிந்தையின் உள்ளே**
**சிவன்இருந் தானே**

தெளியவல்லார் - தெளிவுபடுத்துகிற ஞானிகள்.
சிந்தையின் உள் - மனத்திற்குள் கள்ளத்தனமாக.
சிவன் இருந்தான் - இறைவன் இருப்பது தெரியவரும்.

மனத்திற்குள் இறைவன் ஒளிந்திருப்பது காரணமாகக் கள்ளர் என்கிற பெயர் இறைவனுக்கு உண்டு. இறைவன் தங்குவதற்கு மனம் வீடாக இருப்பதால் மனத்தை இல்லம் என்று சொல்வதுண்டு. மனம் தனக்குள் இருக்கிற இறைவனைப் பார்க்காமல் வீடாக மாத்திரம் வெறுமனே இருப்பதால் இல்லம் உடையார் என்று மனத்தைக் கொஞ்சம் ஏளனமாகச் சொல்வதுண்டு.

வீடாக இருக்கிற மனமும் வீட்டுள் இருக்கும் இறைவனும் ஊடல் நீங்கி ஒருவரோடொருவர் கலந்து விட்டால் அதுதான் பேரானந்த வெளி. திருவருள் என்றும், சிவபுரம் என்றும் சொல்லப்படுவது அதுதான். திரு உந்தியாரில் உள்ள பாடல் ஒன்று அதை விளக்குகிறது. விளக்கம் திருமூலருடைய கவிக்குத் துணையாகவும் இருக்கிறது.

**களளரும் இல்லம்**
**உடையாரின் கைகூடின்**
**வெள்ள வெளியாம் என்று**
**உந்தீ பற**
**வீடும் எளிதாம் என்று**
**உந்தீ பற**

இறைவனும் இதயமும் ஒன்றுகூட வேண்டுமானல் இதயம் தெளிய வேண்டும். திருமூலரும் அதைத்தான்,

**சிந்தை தெளியத்**
**தெளியவல் லார்கட்கு**
**சிந்தையின் உள்ளே**
**சிவன் இருந் தானே**

என்று அடித்துச் சொல்லுகிறர்.

**51**

ஆணவத்தை ஒடுக்கி விட்டால் ஐம்புலன்களின் மூலமாகவும் மனம் (என்கிற மெய்யுணர்வு) அனுபவிக்க முடியும் இறைவனை.

**பார்ப்பான் அகத்திலே**
**பாலபசு ஐந்துண்டு**
**மேய்ப்பாரும் இன்றி**
**வெறித்தே திரிவன**
**மேய்ப்பாரும் உண்டாய்**
**வெறியும் அடங்கினுல்**
**பார்ப்பான் பசு ஐந்தும்**
**பாலாய்ச் சொரியுமே**

பார்ப்பான் அகம் - மெய்யுணர்வு பெற்ற ஞானியின் மனம்.

பால்பசு ஐந்து - கண், முக்கு, செவி, வாய், மெய் என்கிற ஐம்புலன்கள். ஐம்புலன்களும் இறைவனை அடைவதற்கு அங்கமான கருவிகள்.

அதனால் ஒவ்வொரு புலனையும் கறவைப்பசு என்று சொல்லி இருக்கிறது.

மேய்ப்பார் - ஆணவத்தை ஒழிக்கிறவர்கள். ஆணவத்தை ஒழிக்கிறவர்க ளுக்குப் புலன்கள் கறவைப் பசுவாக இருக்கின்றன. ஆணவத்திற்கு முதுகு கொடுத்த அடிமைகளுக்கோ புலன்கள் வெறிகொண்டு கொல்கிற புலிகளாய் இருக்கின்றன.

## தமிழும் தாவரமும்

**52**

ஆணவத்தை மனத்திற்குள் இறக்கிக் கரைத்துவிடுவது ஒன்றுதான் உண்மை யான கல்வி. அத்தகைய உண்மைக் கல்வியைக் கற்கிற காலத்து நம்முடைய பூர்வ வாசனை கொஞ்சம் கொஞ்சமாகப் புலப்படும். எங்கும் நிறைந்த பரம் பொருளிடம் இருந்தல்லவா நாம் வந்திருக்கிறோம். வந்து பலவகையான பிறவித் துன்பங்களு க்கும் நாம் ஆளாகி விட்டோமே, எதற்காக நாம் துயரத்திற்கு உள்ளாக வேண்டும் என்கிற கலக்கமே உண்டாகிவிடும். கலக்கம் முதலில் கசப்பாக இருப்பதில் வியப் பில்லை. கசப்பின் காரணமாக உண்மைக் கல்வியை நிறுத்திவிடக்கூடாது. விடாது உண்மைக் கல்வியில் தொடர்ந்து போனுல் பரம்பொருளிடமிருந்து தனியாக வந்ததும் நாம் அல்ல, பலபிறவிகள் எடுத்துச் சங்கடப்படுவதும் நாம் அல்ல, பரம்பொருள் ஒன்றுதான் என்ற உண்மைநிலை புலப்படும். இப்படிப் புலப்படுகிற நிலை அதிசயமானது. அதிசயத்தில் மயங்கி உண்மை நிலையைக் கைவிட்டவர்கள் பலர் இருக்கிறுர்கள். அப்படி எல்லாம் அதிசயத்தில் மயங்கவிடக் கூடாது. அதிசயத் திலும் மயங்காமல் தொடர்ந்து சென்றுல் எங்கும் நிறைந்த பேரானந்தத்தோடு

கலந்துவிடமுடியும். அப்படிக் கலந்துவிடுகிற நிலைக்குக் கொஞ்சம் பொறுமையும் வேண்டியதுதான்.

**வழுதலை வித்திடப்**
**பாகல் முளைத்தது**
**புழுதியைத் தோண்டினேன்**
**பூசணி பூத்தது**
**தொழுதுகொண்(டு) ஓடினர்**
**தோட்டக் குடிகள்**
**முழுதும் பழுத்தது**
**வாழைக் கனிய**

வழுதலை வித்திடுகல் - உண்மைக் கல்வியைக் கற்றுத் திளைத்தல் அதாவது ஆணவத்தை மனத்திற்குள் செலுத்தி இறக்குதல்.

பாகல் முளைத்தல் - உண்மைச் கல்வியைக் கற்கிற காலையில் தோன்றுகிற பூர்வ வாசனைக்குப் பாகல் என்று பெயர். கசப்பை உணர்த்துவது.

புமுதியைத் தோண்டினேன் - கசப்பில் கலங்காது மேலும் ஆழமாக ஆணவத்தை உள்ளே இறக்கவும்.

பூசணி பூத்தது - எல்லாம் அவனே என்கிற உண்மை நிலை நேருக்கு நேராகப் புலப்பட்டது.

தோட்டக் குடிகள் - பொறுமை இல்லாமல் ஏமாந்த பேர்வழிகள்.

தொழுதுகொண்டு ஓடினர் - அதிசயத்தை அனுபவிக்க முடியாமல் அதில் மயங்கி உண்மைக் கல்வியை அப்படியே நிறுத்திவிட்டார்கள்.

முழுதம் - அவ்வளவையும் கண்டு பொறுமையோடு மேலும் கல்வியைக் கற்க.

வாழைக்கனி பழுத்தது - எங்கும் நிறைந்த பேரானந்தத்தோடு பேதமற்றுக் கலந்துவிட முடிந்தது.

வமுதலை வித்து, பாகல் முளை, பூசணிப்பூ, வாழைக்கனி என்கிற நான்கு பாத்திரங்களைக்கொண்டு அற்புதமாக தாடகம் போட்டுவிட்டது கவி.

**53**

பேரண்டங்கள் முழுவதும் நிறைந்திருக்கிறுன் இறைவன். நம்முடைய உயிர், உடல்,. உணர்ச்சி இவைகளின் ஒவ்வொரு அணுவிலும் இறைவன் நிறைந்திருக்கி றுன். நாம் நம்முடையது என்று சொல்லிக் கொள்ள ஒன்றுமே கிடையாது. அப்படி யாஞல் எல்லாம் அவனே என்கிற உண்மை நிஜலயைத் தெரியத் தெரியப் பரம் பொருஊளயே பார்க்கமுடியும். பார்க்கிறதும் நமக்குள்ளாகவேதான். அதாவது நம்மு டையது என்று உரிமை கொண்டாடிய உடலி(கரும்பி)ன் ஒவ்வொரு அணுவிலும் இறைவஊனப் பார்க்கமுடியும். உடலி(கரும்பி)ல் உள்ள உணர்ச்சியி(தேனி)லும் இறைவஊனப் பார்க்கமுடியும். உடலு(கரும்பு)ம் உணர்ச்சியு(தேனு)ம் இறைவனாகத் தெரிந்தபிறகு இறைவஊனத் தானே அனுபவிக்கமுடியும்? நடித்து ஏமாற்றிய உடஊலயும் உணர்ச்சியையும் அனுபவிக்க முடியாது அல்லவா?

**கரும்பும் தேனும்**
**கலந்ததோர் காயத்தில்**
**அரும்பும் கந்தமும்**
**ஆகிய ஆனந்தம்**
**விரும்பியே உள்ளம்**
**வெளியுறக் கண்டபின்**
**கரும்பும் கைத்தது**
**தேனும் புளித்ததே.**

கரும்பு - கட்டுமானமும் அமைப்பும் கொண்ட உருவம்.
தேன் - உணர்ச்சி,
காயம் - உடம்பு
அரும்பும் கந்தமும் ஆகி ஆனந்தம் - பூவில் மணம் நிறைந்திருப்பதுபோல உடலி லும் உணர்ச்சியிலும் ஆனந்த மயமாக நிறைந்திருக்கிறான் இறைவன். உள்ளம் விரும்பி வெளியுறக் கண்டபின் எங்குமாய் எல்லாமாய் நிறைந்து இருக்கிற இறைவஊன ஆணவம் நீங்கிய மனம் நேருக்கு நேராகப் பார்க்கிறபொழுது.

கரும்பும் கைத்தது - நம் உடலில் மறைந்துகிடந்த பரம் பொருள் தெரிந்துவிடும், உடலின்மீதுள்ள பற்றும் அழிந்து விடும்.

தேனும் புளித்தது - ஆணவ அறிவும் மறைந்து இறைவனுடைய பேரறிவு வந்து விடும். ஆணவ அறிவின் மேல் வைத்திருந்த ஆசையும் ஓடிவிடும். மிச்சம் பரம் பொருளும் பேரானந்தமும்தான்.

**குறிப்பு:-**

உண்மை தெரிந்தவுடன் அழிந்துபோகிற பொய் நிஜலயை

“கரும்பும் கைத்ததே தேனும் புளித்ததே" என்று தெளிவாக எடுத்துக் காட்டுகிறுர் திருமூலர்.

**54**

எந்த வகையிலும் குறை இல்லாமல் உண்டாக்கப் பட்டிருக்கிறுன் மனிதன். மனம் என்கிற அற்புத சாதனமும் மனிதனுக்குக் கொடுக்கப்பட்டிருக்கிறது. மனிதனுடைய நலனேயும் ஆனந்தத்தையும் கருதி இவ்வளவு உபாயங்கள் வகுக்கப்பட்டிருந்தும் மனிதனுடைய துயரம் குறையவில்லே.

மழையில் நனேந்த கருடன் சிறகுகளே அடித்து நீர்த்துளிகளேச் சிந்திவிடுவது போன்று நினேத்த மாத்திரத்தில் துன்பங்களே மனிதனும் உதறிவிட முடியும். பேரானந்த வெளியில் வட்டமிட்டுப் பறக்கவும் மனிதனுல் முடியும். நான் நான் என்று அடித்துக் கொள்கிற ஆணவத்தை அப்படியே இதயத்திற்குள் திருப்ப வேண்டியது தான். எல்லாம் அவன் செயல் என்கிற உண்மை நிலே புலப்படும்.

உடனே துயரங்கள் ஓடிவிடும். மனிதன் ஆனந்தத்தோடு ஆனந்தமாக கலந்து விடவும் மூடியும். மனிதன் இந்த எளிமையான காரியத்தைச் செய்கிறதில்லே. அடடா! உண்மையோடு கலக்கக் கலக்க அது எவ்வளவு எளிமையாக இருக்கிறது. எவ்வளவு ஆனந்தமாக இருக்கிறது என்று வியக்கிறுர் திருமூலர்.

**ஒன்றுகண் டேன்இவ்**
**உலகுக்(கு) ஒருகனி**
**நன்றுகண் டாய்அது**
**நமச்சிவா யக்கனி**
**மென்றுகண் டால்அது**
**மெத்தென் றிருந்திடும்**
**தின்றுகண் டால் அது**
**தித்திக்கும் ஆறே**

கனி - ஆனந்தம்

ஒன்று கண்டேன் - ஆனந்த நிலேயில் கலந்துவிட ஒரே ஒரு மார்க்கம்தான்.

உண்டு - அதை நான் கண்டுகொண்டேன். அந்த மார்க்கம் என்ன?

நமச்சிவாயக் கனி - எல்லாம் அவனே. நான் என்பது இல்லே, அயலான் என்பது இல்லே என்கிற உண்மை நிலேயைத் தியானிப்பதுதான்.

மென்று கண்டால் - உண்மை நிலேயைத் தியானிக்கத் தியானிக்க

மெத்தென்றிருக்கும் - எளிமையாகவே இருக்கிறது. அதாவது ஆணவத்தை அழிப்பதற்கும், ஆனந்தம் ஏற்படுவதற்கும் சிரமப்பட வேண்டியதில்லை. உண்மை யை அறிகிற ஒன்றே போதும்.

தின்று கண்டால் - உண்மையைத் தியானித்துத் தியானித்து அதுவோடு அதுவாய்க் கலந்து விட்டாலோ.

தித்திக்கும் - பேரானந்தம் ஒன்று தவிர வேறு ஒன்றுமே இல்லை. அவன் நான் என்பதுகூட இல்லை. அப்படி ஆகி விடுகிறோம் நாம்.

## அழகு, அழகு, நாமா உண்மை

**55**

ஒரு புத்தகத்தை எடுத்து வாசிக்கிறோம். எழுத்துச் சரியாகத் தெரியவில்லை. கண்ணாடியைப் போட்டு(க்கொண்டு) வாசிக்கிறோம். தெளிவாய்த் தெரிகிறது எழுத்து. ஆனாலும் எழுத்தைப் பார்ப்பது கண்ணாடி அல்ல. கண்தான். சிறிது யோசித்துப் பார்த்தால் பார்க்கிற செயல் கண்ணுக்குக்கூட இல்லை. பார்க்கிற செயல் அறிவுக்குத் தான் உண்டு என்பது தெரியும். மேலும் யோசித்துப் பார்த்தால் பார்க்கிற காரியம் நம்முடைய அறிவுக்குக்கூட இல்லை. எங்கும் நிறைந்த பரம்பொருள் (பேரறிவு) ஒன்றுக்குத்தான் பார்க்கிற செயல் உண்டு என்று தெரிந்துவிடும்.

கண்ணிற்குக் கண்ணாடி கருவியாக இருப்பதுபோல் அறிவுக்குக் கருவியாக இருக்கிறது கண். அறிவோ பேரறிவுக்குக் கருவியாகவிருக்கிறது.

பேரறிவு ஒன்றுதான் உண்மையானது. மற்றையக் கருவிகள் அவ்வளவும் வேறும் தோற்றம்தான். வெறும் தோற்றமாயெ நம்முடைய (ஆணவ) அறிவு அறியாமை தான். இந்த அறியாமையை அறிவு அறிவு என்று சொல்வது கண்ணாடி பார்க்கிறது, கண்ணாடி காண்பிக்இறது என்று சொல்கிற கணக்குத்தான்.

அறிகிலேன் என்று சொல்கிறது ஆணவம். அறிகிலேன் என்று சொல்வதும் அந்த ஆணவம்தான். அறிகிலேன் என்று சொல்லும்போது ஏதோ சிலவற்றை அறிந்தேன் என்ற பொருள் நிற்கத்தான் செய்கிறது. ஆகவே நம்மை அலைக் கழிக்றெ ஆணவ அறிவு மாயவேண்டும். அப்போதுதான் பேரறிவோடு ஒன்றுகிறோம். அறிவு, அறியாமை இவற்றைக் கடந்து “அறிவானால்" அதாவது பேரறிவோடு ஒன்றினால் (ஆணவ) அறிவின் அறியாமை வெகுரஸமாய் இருக்கும். தான் சுமந்து செல்ல வில்லை. என்று உணருதலே அனந்தம்.

ஆனந்தமயமான பேரறிவோடு ஒன்றவேண்டுமானால் அறிவு அறிவு என்று நாம் அடித்துக் கொள்கிற அறியாமையைக் கழற்றி எறிந்துவிட வேண்டியதுதான். வேறு வழியில்லை என்கிறார் திருமூலர்.

**அறி(வு)அறி வென் றங்(கு)**
**அரற்றும் உலகம**
**அறிவறி யாமை**
**யாரும் அறியார்**
**அறிவறி யாமை**
**கடந்தறி வானல்**
**அறிவறி யாமை**
**அழகிய வாறே**

அறிவு அறியாமை - (நம் ஆணவ) அறிவு ஒன்றும் அறியாதிருத்தலை.

அறிவு அறியாமை கடந்து - அறிகிறேன் என்றும் அறிகிலேன் என்றும் பலவகையாக நடிக்கிற ஆணவத்தைத் தொலைத்து.

அறிவு ஆனால்-– அறிவு மயமான கடவுளோடு ஒன்றினால் .

அறிவு அறியாமை - நம்முடைய ஆணவ அறிவு வெறும் தோற்றம்தான்; அதாவது அறிவற்றதுதான் என்று தெரியும்.

அப்படித் தெரிவது - அழகிய ஆறு -ஆனந்தமானது.

## மரணம் சாதாரண விஷயம்

**56**

மனிதனுக்கு அறிவு தோன்ற ஆரம்பித்ததிலிருந்தே மரணத்தைப்பற்றிய பயமும் உண்டாகிவிட்டது. மரணமோ அறிவு தோன்றுவதற்கு முன்பிருந்தே ஏற்பட்டு வந்திருக்கிறது.

மரணத்தில் ஏற்பட்ட பயம் மனித வர்க்கத்தை எப்படி யெல்லாமோ உருமா ற்றி இருக்கிறது. மரண பயத்தின் மூலம் எவ்வளவோ நல்ல காரியங்களும் எவ்வள வோ கெட்ட காரியங்களும் உண்டாகியிருக்கின்றன.

“பிறந்த உயிர்கள் எதற்காக மடியவேண்டும்? இறந்து போன ஜீவன்கள் என்னென்ன நிலையை அடைகின்றன இவைபோன்ற எத்தனையோ புதிர்களுக்கு மனித வர்க்கம் இரையாக இருக்கின்றது.

நமக்கு வேண்டியவர்கள் காலமாதிவிட்டால் “அட்டா போய்விட்டாரே" என்று ஒரு ஏக்கம் உண்டாகிறது. எப்படி இறந்தார் எனிகிற பரிவும் அதை ஒட்டி மயக்கமும் ஏற்படுவது இயல்புதான்.

ஆனால் இத்தகைய முடிபும் உறுதியும் நிலைத்து நிற்பது இல்லை. வாழ்க்கைப் போராட்டத்தில் சாதாரண துரும்பை ஒத்த சின்னஞ்சிறு நிகழ்ச்சியால்கூட உந்தி எறியப்பட்டுவிடுகின்றன, மேலே குறிப்பிட்ட உறுதிகள் முடிபுகள்.

அடிப்படை இல்லாது வலுவிழந்து கிடைக்கிற இந்த உறுதியும் முடிபும் யாதொரு பலனும் இல்லாதது என்று காட்டத்தான் “சுடுகாட்டு ஞானம்" என்று அதைச் சொல்லி இருக்கிறார்கள்.

மரண பயம் நீங்க வேண்டுமானால் நிரந்தரமான ஆனந்த உணர்ச்சி ஒன்று வேண்டும்.

--- ---- ---- ---- ---- ---- ---- ---- ---- ---- ----

ஆனந்த உணர்ச்சியைச் சுரக்கிற பரம்பொருளும் வேண்டியதுதான். பரம்பொருளின் பிரகாச வெள்ளத்தில் தான் மரணத்தின் வேஷம் வெட்ட வெளிச்ச மாகிறது.

அதன் பின்புதான் மனிதனுக்கு நம்பிக்கையும், ஆனந்தமும் ஏற்படுகிறது. மரணத்தைப் பற்றிய ஞானம் மரணபயத்தைப் போக்கிவிடுகிறது.

திருமூலர் ஐந்து நிமிடங்களில் மரண பயத்தை ஓட்டி விடுகிறார். நிரந்தரமான ஆனந்தமும் இதயத்தில் நிரம்பி விடுகிறது. எப்படி என்று பார்க்கலாம்.

சமுத்திரத்தில் அலை, குமிழ் எத்தனை எத்தனையோ உண்டாகின்றன. அப்படியே மறைந்தும் விடுகின்றன. அலையும், குமிழும் உண்டாக உண்டாக யாராவது திருவிழா நடத்துவது உண்டா? இல்லை. அலையும், குமிழும் மறைய மறைய யாராவது துக்கம் கொண்டாடினார்களா? அதுவும் கிடையாது. பிரபஞ்சம் இருக்கிறதே அதுவும் சமுத்திரம் மாதிரிதான். சமுத்திரத்தில் அலையும், குமிழும் உண்டாவது போலப் பிரபஞ்சத்தில் உயிர் வர்க்கங்கள் உண்டாகின்றன. அலையும், குமிழும் அழிவதுபோல உயிர் வர்க்கங்களும் அழிந்து கொள்கின்றன.

காற்றும், சமுத்திரமும் கலந்த ஒரு சம்மந்த நிலைதான் தோன்றி மறைகிற அலையும், குமிழும். மற்றப்படி அலை என்றோ குமிழ் என்றோ தனியாக இல்லைதான். இதை மனதில் வைத்துக்கொண்டால் உண்மை விளங்கிவிடும். இறைவன் ஒருவன் தான் உண்மைப்பொருள். அவனுடைய திருமேனியில் விளைகின்ற சலனங்கள்தான் பிரபஞ்சங்களும், வஸ்துக்களும், மற்றப்படி உயிர் (நாம்) பிறந்தோம் என்பதற்கோ, இறந்தோம் என்பதற்கோ ஒன்றுமே கிடையாது.

உயிரினுடைய பிரயாணம் நீண்ட பிரயாணம். அது எத்தனை எத்தனையோ வேஷங்களைத் தாங்கி வந்திருக்கின்றது. இன்னும் எத்தனை எத்தனையோ வேஷங் களைத் தாங்கப் போகின்றது. கால்வினாடிகூட அது ஓய்ந்திருப்பதில்லை. ஓய்ந்திருப்ப

தாகத் தோன்றுவது வெறும் மயக்கம்தான். அத்தகைய மயக்கம்தான் உயிர்கள் . பிறப்பது போலவும் ஏமாற்றி விடுகிறது.

உயிர் என்பது கணநேரம்கூடச் சும்மா இராமல் பிரயாணம் செய்துகொண்டே இருக்கிறது என்பதைத் தெரிந்தவர்களுக்கு இந்த மயக்கம் ஏற்படாது.

வேகம் தணிய உயிர் எடுத்து வருகிற வேஷங்கள் தான் உருவங்கள். இந்த உருவங்களின் மூலம் உயிர் இயங்குகிறது. அப்படி. இயங்குவதற்கு அங்கமான உடம்பின் ஒவ்வொரு பகுதியையும் ஒவ்வொரு தத்துவமாகச் சொல்லி இருக்கிறது. உதாரணமாகக் கேட்கிறது என்று எடுத்துக்கொண்டால் அதற்குத் தேவையான ஓசை, செவி, ஆகாயம் முதலிய கூறுகளை மூன்று தத்துவங்கள் என்று சொல்லியிருக் கிறது.

வஸ்துக்களில் எல்லாம் நேர்த்தியானதும், தெளிவானதும் ஆன வஸ்து மனிதன். மனிதனிடத்தில் எத்தனையோ தத்துவங்கள் செயல்படுகின்றன. மனிதன் சாப்பிடுகிற சோறும், கறியும், மோரும் எப்படி ரத்தமாகின்றது? அந்த ரத்தம் எப்படித் தலையிலுள்ள ரோமம் முதல் காலில் உள்ள நகங்கள் வரை ஒவ்வொரு அங்கங்களு க்கும் ஊட்டப்படுகின்றது என்பதைத் தெரிந்துவிட்டால் பல தத்துவங்கள் வேலை செய்வது தெரியவரும். இந்தத் தத்துவங்கள் அவ்வளவையும் எப்படியோ வகுத்துத் தொகுத்துத் தொண்ணூற்று ஆறு என்று. சொல்லி இருக்கிறது. எண்ணிக்கை முக்கியம் அல்லதான். ஆனால் உயிர் (கோயில்) ஓடி (சிதைந்து) விட்டால் தத்துவங்கள் செயல்படாது. அதாவது உயிர்தான் உண்மை என்பதையும், அந்த உயிர் என்பது நாம் அல்ல எங்கும் நிறைந்த பரம்பொருள்தான் என்பதையும் மறந்து விடக் கூடாது. இனிப் பாடலைப் பார்க்கலாம்.

**முப்பதும் முப்பதும்**
**முப்பத்(து) அறுவரும்**
**செப்பம் மதிள் உடைக்**
**கோயில் உள் வாழ்பவர்**
**செப்பம் மதிள் உடைக்**
**கோயில் சிதைந்தபின்**
**ஒப்ப அனைவரும்**
**ஓட்டெடுத்தாரே**

முப்பதும் முப்பதும் - அறுபது, அதோடு இன்னொரு முப்பத்தாறினையும் கூட்டத் தத்துவங்கள் தொண்ணூற்று ஆறு என்று ஒரு கணக்கு.

செப்பம்மதிள் – நேர்த்தியாக, உறுதியாகக் கட்டப்பட்ட கோட்டை, அதாவது உடம்பு; கோயில்.

சிதைந்தபின் - கோட்டையை விட்டு உயிர் வெளியேறினால்;

ஒப்ப - அப்பொழுதே;

ஓட்டெடுத்தார் - ஓடிப் போய்விட்டார்கள். யார்? தத்துவங்கள் தொண்ணூரறற்று வரும்தான்.

உடம்பும், உடம்பில் உள்ள தத்துவங்களும் உண்மை அல்ல: அவை நான், நான் என்று அடித்துக்கொள்வது வெறும் மயக்கம்தான்.

உயிர்மயமாய் இருக்கிற இறைவன்தான் உண்மை என்பது கருத்து.

**ஒப்ப அனைவரும்**
**ஓட்டெடுத்தாரே**

என்பதில் வியப்பும், ஹாஸ்யமும் அற்புதமாய்ப் பேசுகின்றன.

**57**

இறைவனையும் உயிரையும் தனித்தனியாகப் பிரித்துப் பார்ப்பது சரியில்லை தான். பிரித்துப் பார்த்தால் உயிரை வெறும் ஜடம் என்றுதான் சொல்லவேண்டும். உயிரைக் கருதும்பொழுது கல்லும் மண்ணும் எப்படி ஜடமாதிறதோ, அப்படியே இறைவனைக் கருதும்பொழுது உயிரும் ஜடம் தான்.

ஆண் பெண் என்கிற வேஷங்களைத் தாங்கி நாடகம் போடுகிறது உயிர்த் தத்துவம். நாடகம் பொய்யானது தான். விசித்திரம் ஆனதுதான். விசித்திரம் தெரிய வேண்டுமானல் அனந்தம் விளையவேண்டும். அதாவது இறைவனுடைய திருவருள் கிடைக்கவேண்டும்.

**மண் ஒன்று கண்டீர்**
**இருவகைப் பாத்திரம்**
**திண் என்(று) இருந்தது**
**செய்வினை சேர்ந்தது**
**விண் நின்று நீர்விழின்**
**மீண்டும்மண் ஆனல்போல்**
**எண்இன்றி மாந்தர்**
**இறக்கின்ற ஆறே**

மண் - இறைவனுடைய செயலாய்த் தனக்கு ஒன்றும் இல்லாமல் நடிக்கிற உயிர்த் தத்துவம்;

திண் என்று இருந்தது - நடித்து நடித்து உடம்பைப் பெற்றுவிட்டது; உடம்போ திடப்பொருளாக விளைந்துவிட்டது.

செய்வினை சேர்ந்தது - இறைவன் உள்நின்று இயங்க, ஆனந்த சிருஷ்டிக்கு உருவமாக விளங்குகிறது உயிர்த் தத்துவம்.

ஃஇறைவனுடைய நியதியில்தான் வஸ்துக்கள் நாடகம் ஆடுவது. ஆட்டத்திற்கு வேண்டிய காலம், இடம் அவ்வளவும் வகுத்து வைக்கப்பட்டிருப்பது நியதி தத்துவத் தில் தான். இது காரணமாகவே நியதி தத்துவத்தை விண் என்றும் இறைவனுடைய திருவருளை நீர் என்றும் சொல்லி இருக்கிறது. மீண்டும் மண் ஆவது நியதி தத்துவம், உயிர்த் தத்துவத்தை வேறு வேஷத்திற்குக் கொண்டு போனபின் சூனியமாகத் தோன்றுகிற மயக்கம்.

மயக்க உணர்ச்சி காரணமாகத்தான் தாய் இறந்து போனாள், தந்தை இறந்து போனார் என்று மனிதர்கள் கணக்குப் போட்டுக் கலங்குகிறார்கள். கணக்கு வகை இல்லாத கணக்குதான். கலக்கமும் முறை இல்லாத கலக்கம்தான்.

**குறிப்பு:-** அருவிநீர் மலை உச்சியிலிருந்து தடாகத்தில் விழுகிறது, வழிந்து திரும்புகிறது. முட்டி மோதி முடிவில் ஆறாகச் சமுத்திரத்தில் கலந்துவிடுகிறது.

கரையில் இருக்கிற மரமும், செடியும், புல்லும் நீரோட்டத்தின் செயலை உணராமல் "தண்ணீர் போகிறதே போகிறதே" என்று வருந்துவது சரியாகுமா? அது போலத் தான் கலங்குவதும் கதறுவதும் என்று வியக்கிறார் திருமூலர்.

--- ---- ---- ---- ---- ---- ---- ---- ---- ---- ----

**58**

மரணத்தைக்கண்டு திருமூலர் பயப்படுவது கிடையாது. ஆனால் மரணத்தைக் காட்டி மக்களைக் கொஞ்சம் பயமுறுத்திப் பார்ப்பார். எதற்காக? மரணத்தைப்பற்றி மக்களுக்குத் தெம்பும், உறுதியும் ஏற்பட வேண்டும் என்பதற்காகத்தான்.

நல்வழியில் நல்ல காரியங்கள் செய்து மக்கள் ஆனந்தம் அடையவேண்டும் என்பதற்குத்தான். ஒரு பாடலைப் பார்க்கலாம்.

**நாட்டுக்கு நாயகன்**
**நம்ஊர்த் தலைமகன்**
**காட்டுச்சிவிகை ஒன்(று)**
**ஏறிக் கடைமுறை**
**நாட்டார்கள் பின்செல**
**முன்னே பறைகொட்ட**
**நாட்டுக்கு நம்பி**
**நடக்கின்ற ஆறே**

காட்டுச் சிவிகை - பாடை

**குறிப்பு:** - "அடடா! மக்களுடைய அறியாமை எவ்வளவு அழகாக இருக்கிறது. ஒன்றும் இல்லாத சடலத்தை இப்படி எல்லாம் பாடையில் வைத்து, மேளதாள வாத்தியங்களோடு சுற்றிச்சுற்றி வருகிறுர்களே இது என்ன அநியாயம்" என்று அநிசயப்படுகிறுர் திருமூலர். அதிசயத்தைத் தமிழ்க்கவி அற்புதமாய் எடுத்துக் கொடுக்கிறது.

**59**

பதனீர் கருப்புக் கட்டியாக விளைந்து விடுகிறது. பதனீர் செத்துப்போய்விட்டதே என்று கதறுவதும் அதற்குப் பல மரணச் சடங்குகள் செய்வதும் பொருத்தம் இல்லாத காரியங்கள்.

மரணம் என்பது வெறும் பொய்யான காரியம். வெறும் பொய்யான ஒன்றுக்கு வேண்டாத சடங்குகள் செய்து பாசாங்கு பண்ணுவது மனிதர்களின் அறியாமைதான்.

**ஊர் எலாம் கூடி**
**ஒலிக்க அழுதிட்டுப்**
**பேரினை நீக்கிப்**
**பிணம் என்று பேரிட்டுச்**
**சூரியங் காட்டிடைக்**
**கொண்டுபோய்ச் சுட்டிட்டு**
**நீரினில் மூழ்கி**
**நினைப் பொழிந்தாரே**

சூரியங்காடு - சுடுகாடு.

**குறிப்பு:**- அழுதிட்டு, பேரிட்டு, சுட்டிட்டு என்கிற சொல் வரிசைகள் மேலும் என்ன மேலும் என்ன என்று கேட்கின்றன. சடங்குகளைச் செய்து முடிப்பதில்தான் மக்களுக்கு ஆத்திரம். சடங்குகள் முடிந்தன. அவனையும் மறந்தார்கள்.

தம்மையும் மறந்துவிட்டார்கள். அடடா என்ன அறியாமை, என்ன பரிதாபம்!

பரிவையும் ஹாஸ்யத்தையும் வார்த்தைகள் நடனம் ஆடியே காட்டிவிட்டன. கல்வியில்தான்.

**60**

உடல் தத்துவத்தின் அமைப்பும், கட்டுமானமும் அற்புதமான காரியம். எலும்புகளை நிறுத்தி நரம்புகளால் பின்னப்பட்டுத் தசைக் கூறுகளைக் குழைத்து

வைத்திருக்கிறது. காற்றும் நீரும் வந்து போக வசதியான முறையில் ஒன்பது வாசல்கள் வைக்கப்பட்டுள்ளன. வரவும் போக்கும் தாமதம் இல்லாமல் நடைபெறுவ தால், தங்குதல் என்கிற காரியமும் உயிருக்கு இருக்கத்தான் செய்றெது.

நுட்பமான தோல் வலையைப் பின்னிப் போர்த்தி இருக்திறது. இது அதிசயத்திலும் அதிசயம். அது காரணமாக உடம்பிற்குத் தோல்பை என்கிற பெயரும் கிடைத்து விட்டது.

உடல் தத்துவத்தை இப்படிப் பொருத்தமாகவும், அதிநுட்பமாகவும் வளைந்துகொண்டது உயிர்த்தத்துவந்தான்.

உயிர்த்தத்துவத்தின் நாடகம் இடையறுமல் நடக்கிறது. அது காரணமாகத்தான் "கூத்தன்" என்று அருமையாய்க் குறிப்பிட்டிருக்கிறுர்கள் உயிரை. நாடகம் மாற, மாற வனையப்பட்ட உடல் (வேஷம்) களையப்படவேண்டிய வெறும் வேஷந்தான்.

வேஷம்போன வெறும் வேஷத்தைப்பற்றி ஏன் கவலைப் படவேண்டும்?

**காக்கை கவரில் என்**
**கண்டோர் பழிக்கில் என்**
**பால்துளி பெய்யில் என்**
**பல்லோர் பழிச்சில் என்**
**தோல்பையுள் நின்று**
**தொழில் அறச் செய்தூட்டும்**
**கூத்தன் புறப்பட்டுப்**
**போன இக்கூட்டையே**

கவரில் என் - கொத்தித் தின்றுல் என்ன;
பழிக்கில் என் - இகழ்ந்து பேசினுல்தான் என்ன;
பால்துளி பெய்தல் - பாலாபிஷேகம்;
பழிச்சில் என் – புகழ்ந்து போற்றினால் தான் என்ன;
தொழில் அறச்செய்து ஊட்டும் – எடுத்த காரியத்தை மிச்சம் இல்லாது நடத்திமுடிக்கிற;
கூடு - உயிர்போன வெறுங்கூடு.

**குறிப்பு:-** மனித வாழ்க்கையின் மிச்சம் என்ன தெரியுமா, எங்கும் நிறைந்த ஆனந்த தத்துவத்தின் செயல் ஒன்றுதான். மற்றவை அவ்வளவும் பொய். இந்த அதிசயத்தை "*கூட்டையே" என்று துண்டாக வேறுபடுத்திக் காட்டி இருக்கிறது. இது அருமையான உத்தி.

மக்களின் அறியாமை காரணமாக ஏற்படுகிற வியப்பும், ஆங்காரமும் "காக்கை, பால்துளி, தோல்பை, கூத்தன்" என்கிற வல்லின எதுகைகளில் விழுந்து விழுந்து அழுத்தம் கொடுக்கின்றன.

தாள இயலின் அதிசயமான சிருஷ்டிகளைத் தமிழ்க்கவிகளின் எதுகைகளிலும், மோனைகளிலும் கண்டு அனுபவிக்கலாம். அப்படி அனுபவிக்கக் கொடுத்துவைத்த வாய்ப்பான கவி.

**61**

பூமி சதாச் சுற்றிக் கொண்டிருக்கிறது. மற்றைய கிரகங்களும் அப்படித்தான். ஒழுங்கான சுழற்சி காரணமாகத்தான் பகல் என்றும், இரவு என்றும் ஏற்படுகிறது. மற்றப்படி இரவு, பகல் என்ற பேதம் திடையாதுதான். பகல், இரவு என்கிற இரண்டு பொய்த் தோற்றங்களுக்கும் ஓய்வு கிடையாது. ஒன்றினுடைய முடிவில் மற்றொன்று தொடர்ச்சியாக உதயமாகி வருகிறது. பிறப்பு, மரணம் என்கிற காரியங்களும் அப்படித்தான். எங்கும் நிறைந்த திருவருளின் நியதி பிறப்பாகவும், இறப்பாகவும் தோன்றுகிறது. முடிவில்லாமல் தோன்றிக் கொண்டே இருக்கிறது,

காலம், இடம் இவைகளின் வரம்புக்கு உட்பட்டதால் வந்த மயக்கத்தின் விளைவுதான் அவ்வளவும்.

வரம்பினை மீறி மனதை அப்புறத்தே வைத்தவர்களுக்கு, அதாவது இறுதி அற்ற பேரானந்தத்தோடு கலந்து திளைப்பவர்களுக்கு இத்தகைய மயக்கம் ஏற்படுகிற தில்லை. இனிப் பாடலைப் பார்க்கலாம்.

**கிழக் கெழுந்(து) ஓடிய**
**ஞாயிறு மேற்கே**
**விழக்கண்டும் தேறுர்**
**விழிஇலா மாந்தர்**
**குழக்கன்று மூத்(து) எருத்(து)**
**அய்ச்சில நாளில்**
**விழக்கண்டும் தேறுர்**
**வியன் உலகோரே.**

தேறுர் - தெளிவடையமாட்டார்கள்;
விழி - அறிவுக்கண்;
குழ - இளமையான; மூ
மூத்து - வயது முதிர்ந்து;
விழ - ஆட்டம் ஓய்ந்து விழுவதைப் பார்த்தும்;
வியன் உலகோர் - தெளிவுகொடுக்க எத்தனையோ தத்துவங்களை நிறைத்து

வைத்திருக்கிற, அகன்று பெருகிய இந்த உலகத்தில் வாழ்கிற மனிதர்கள்தான் இன்னும் தெளிவடையாது மயங்குகிறுர்கள்.

**குறிப்பு:-** இரண்டாவது வரியும் நான்காவது வரியும் ஒரேமாதிரியில் மடங்கி வந்திருப்பது பாட்டிற்குத் தனியான சுகத்தைக் கொடுக்கிறது. “விழக்கண்டும் தேறுர்” என்று ஆங்காரமாக வந்து “விழிஇலா மாந்தர்” என்றும் “வியன் உலகோரே” என்றும் ஏளனமாக முடிந்துவிடுகிறது. தொனியும், தாளமும் கைகோர்த்து நடனமாடுகிற அற்புதமான கவி. பாடப்பாட அதன் மணமும், ருசியும் தெரியவரும்.

**62**

மிளகுவற்றல் வியாபாரி ஒருவர் பொதி ஒன்றுக்கு நூற்று எண்பது ரூபாய் என்று ஐந்நூறு பொதி வற்றல் வாங்கினுர். மூன்று மாதத்திற்குள்ளாக வற்றல் பொதி ஒன்று ரூபாய் முன்னூறுக்கு வந்துவிட்டது.

அவ்வளவு வற்றலையும் ஏறின விலைக்கு விற்றுர். கிடைத்த லாபம் அறுபதினு யிரம் ரூபாய்கள், நோட்டுகளைக் கட்டுக்கட்டாக எண்ணி வைத்தார். அடுக்கி வைத்தார்; எண்ணி எண்ணிப் பூரித்துப்போனுர்.

அதற்குள் இதயத்தில் கற்பனைகள் வந்து குவிய ஆரம்பித்துவிட்டன. வீட்டை இப்படி இடித்துக் கட்ட வேண்டும். வயலை மொத்தமாக வாங்கி விவசாயம் செய்ய வேண்டும் என்றெல்லாம் எண்ணங்கள் வந்து வந்து மோதி விட்டன. வயிர நகைகள், பட்டுப்புடவைகள், மாடு கன்றுகள், கடன்கேட்டு நிற்பவர்கள், வேண்டியவர்கள், வேண்டாதவர்கள் அவ்வளவு பேரும் அணிவகுத்து நிற்கிறுர்கள் வற்றல் வியாபாரி யின் மனக்கண் முன்பு.

“நேரம் ஆகவில்லையா, சாப்பிட வாருங்களேன்”? இது அருமை மனைவியின் குரல்.

“இதோ வந்துவிட்டேன், இலையைப் போடு” இது வியாபாரியின் பூரிப்பான பதில்.

வற்றல் குழம்பும், சாதமும், மோரும், தண்ணீரும் வியாபாரிக்கு அன்று ஆனந்தமாக இருந்தது. இரண்டுபிடி சாதம் அதிகமாகவே சாப்பிட்டுவிட்டார். சாப்பாடு முடிந்தது.

“ஜமக்காளத்தை எடுத்துவிரி, தலை அணைகளை எடுத்துப் போடு” என்று மனையாளிடம் வேண்டிக் கொண்டார் வியாபாரி.

இரண்டு பேரும் உட்கார்ந்தார்கள். செல்லத்திலிருந்து பாக்கையும், வெற்றிலை யையும் மனையாள் பக்குவமாக எடுத்துக் கொடுக்க, ஆனந்தமாக மென்று கொண்டார்

வியாபாரி. மனத்திலோ கற்பனை நாடகம், வாயிலோ மென்று குழப்புகிற வெற்றிலைச்சாறு.

அவ்வளவுதான், மனையாளிடம் கொஞ்சம் சல்லாபமாகவும் நடந்துகொண்டார் வியாபாரி.

வல்லிக்கொடி போல மார்பிலே மனையாள் துவள, வியாபாரி ஜமக்காளத்தில் இருந்தாலும் சொர்க்கத்தில் உலாவினார் என்றுதான் சொல்லவேண்டும்.

எதிர்பாராத விதமாக "ஐயோ" என்று கத்தினார் வியாபாரி.

"என்ன என்ன"? என்று தர்மபத்தினி கெஞ்சினாள். இந்தப் பக்கத்தில் குத்துகிறதே என்று இடதுபக்கத்து விலாவில் கையை வைத்துக் காட்டினார் வியாபாரி.

அப்படியே தர்மபத்தினி தன்னுடைய மடியில் நாயகனைப் படுக்கவைத்தாள். கால்வினாடிகூட ஆகவில்லை.

**அடப்பண்ணி வைத்தார்**
**அடிசிலை உண்டார்**
**மடக்கொடி யாரொடும்**
**மந்தணம் கொண்டார்**
**இடப்பக்கமே இறை**
**நொந்தது என்றார்**
**கிடக்கப் படுத்தார்**
**கிடந்தொழிந் தாரே**

அடப்பண்ணி - சமையல் செய்து;
அடிசில் - சாப்பாடு;
மடக்கொடியார் - மனையாள். (பெண்களையும், புலவர்களையும் மரியாதையாக அவர் இவர் என்றுதான் சொல்கிறது. இது பூர்வீகமான தமிழ் முறை. தமிழ்ப் பாஷையின் தொன்மையும், நாகரிகமும் அவ்வளவு பதம்பட்டது)
மந்தணம் – சல்லாபம்.

**குறிப்பு:-**

அடடா போய்விட்டானே, போன இடங்கூடத் தெரியவில்லையே என்று பெருமூச்சு விடுகிறது கவி.

எங்கும் நிறைந்த இறைவனுடைய திருவருள் புல்லிலிருந்து பேரண்டங்கள் முடிய ஒவ்வொன்றிலும் பேதம் இல்லாமல் நாடகம் போடுகிறது. தமிழ் பாஷையும்

அப்படியே பேதம் இல்லாதபடி உண்மையை எடுத்து நடனம் ஆட்டியே காட்டிவிடு கிறது. எதுகை, மோனை முதலிய அங்கங்கள் ஒவ்வொரு கவியிலும் இருந்து நடனம் ஆடுவதைப் பாடி அனுபவிக்க வேண்டும்.

**கிடக்கப் படுத்தார்**
**கிடந்தொழிந் தாரே**

என்று கடை அடியைத் துண்டுபடுத்தி எடுத்துக் காட்டுவது நடனத்தின் அற்புதமான செயல்.

--- ---- ---- ---- ---- ---- ---- ---- ---- ---- ----

## தத்துவ தரிசனம்

**63**

நாம் வாழுகிற உலகத்திற்கு மண்டலம் என்று பெயர். சூரியன், செவ்வாய், வெள்ளி, பூமி முதலிய மண்டலங்கள் பல சேர்ந்து சுழலுகிற குறுவட்டத்திற்கு ராசி மண்டலம் என்று பெயர். கோடானு கோடிக் குறுவட்டங்களை உள்ளடக்கிச் சுழலுகிற பெரு வட்டத்திற்கு அண்டம் என்று பெயர். அண்டங்கள் கோடி கோடியாகச் சேர்ந்து சுமலுகிற பெரு வளையத்திற்கு அகண்டம் ஏன்று பெயர். அகண்டங்கள் இவ்வளவு அவ்வளவு என்றெ கணக்கு இல்லை தான்.

காலமும் வேளையும் கருக்சொள்ளாத மோனநிலை. அத்தகைய மோன நிலையை ஆனந்தப் பெருவெளி என்றும் சிவபுரம் என்றும் சொல்லி இருக்கிறது. ஆனந்தப் பெருவெளி முழுதும், நிரம்பி இருந்த ஆற்றலைச் சக்தி (உமை அம்மை) என்றும், சக்தி இருக்கிற பெருவெளியைச் சிவம் என்றும் நாடகப் பாங்கோடு பிரித்துச் சொல்லியிருக்கிறது.

சிவபுரத்தில் எப்படியோ உண்டாகியது அதிர்ச்சி. அதிர்ச்சி உண்டானபொழுதே குமுறலும், வெடிப்பும், மோதலும், உராய்வும் அப்படி அப்படியே உண்டாகி விட்டன. சூடு (Heat) ஒளி (Light) காந்தம் (Magnetism) மின் ஓட்டம் (Electricity) என்கிற தத்துவங்களும் கிளைத்து விட்டன. தத்துவங்சளிலிருந்து வஸ்துக்களும் முளைத்து விட்டன. வஸ்துக்கள் என்றல் அண்டபிண்ட சராசரங்கள் அவ்வளவுந்தான்.

சிவபுரத்தில் உண்டாகும் அதிர்ச்சியை நடனம் என்றும், அதிர்ச்சியில் விளைந்த பொருள்களை (இறைவனுடைய) கனவு என்றும் அழகாய்ச் சொல்லி இருக்கிறது. இனித் திருமூலரைப் பார்க்கலாம்.

**இடங்கொண்ட சக்தியும்**
**எந்தை பிரானும்**
**நடம்கொண்டு, நின்றமை**

**நானும் அறிந்தேன்**
**படம்கொண்டு நின்றஇப்**
**பல்லுயிர்க்(கு) எல்லாம்**
**அடங்கலும் தாமாய்நின் (று)**
**ஆடுகின் றனே.**

இடம்கொண்ட சக்தி - சிவபுரத்தில் நிறைந்திருக்கிற சக்தி, அதாவது உமை அம்மை. சக்தி சிவபுரத்தைச் சேர்ந்ததுதான். அந்தச் சக்தி பொருள்களாய் வடிவெடுப் பதும் சிவபுரத்தில்தான். இவ்வுண்மையை "இடம் கொண்ட சக்தி" என அவ்விரண்டு கூறுகளையும் ஒன்றாக இணைத்துப் (பலவிதமாக) எப்படியெல்லாமோ விளையாடுகி றது தமிழ்ப் பாஷை.

நடம் - நடனம்;
படம் கொண்டு நின்ற - உருவம் கொண்டு நின்ற;
அடங்கலும் - மிச்சம் சொச்சம் இல்லாமல் ஒவ்வொன்றிலும்தானே.

இறைவனுடைய ஆனந்த நடனம் ஒன்று தான் உண்மையானது. ஆனந்த நடனம்தான் உயிர்களாகவும், உயிர்களின் வடிவங்களாகவும் விளங்குகின்றது.

**64**

ஒவ்வொரு அணுவும், அணுவுக்குள் இருக்கிற ஒவ்வொரு பரமாணுவும் ஆனந்த நடனம்தான். ஆனந்த நடனம் நடைபெறுகிற அரங்குகள் தான். அப்படியானல் ஆனந்த நடனம் நடைபெறுகிற அரங்குகள் இவ்வளவு அவ்வளவு என்று எண்ண முடியாதுதானே?

**அண்டம் எழுகோடி**
**பிண்டம் எழுகோடி**
**தெண்திரை சூழ்ந்த**
**திசைகள் எழுகோடி**
**எண்திசை சூழ்ந்த**
**இரங்கம் எழுகோடி**
**அண்டன் நடம்செயும்**
**ஆலயம் தானே**

எழுகோடி என்பது, ஏழு கோடியைக் குறிக்கும் எண் அல்ல, அளவில்லாதன என்பது பொருள்.
பிண்டம் - வித்து, பரமாணுக்கள்.
இரங்கம் - நட்சத்திரம்

திசைகளை முதலில் ஏழுகோடி என்றும், கடைசியில் எட்டுத்தான் என்றும் சொல்லியிருக்கிறது. குறிப்பிடுகிற எண்கள் அவ்வளவையும் அளவற்றன என்பதற்கு அடையாளமாகக் கொள்ள வேண்டும் என்பதை அவ்வளவு குறிப்பாக உணர்த்துகிறார் திருமூலர்.

ஆனந்த நடனம் நடைபெறுகிற கோயில்கள்தான் அவ்வளவும் என்பதைக் கவி கும்மாளியோடு சொல்கிறது.

**குறிப்பு:-** நாமும், நம்முடைய உடலும், உடலில் உள்ள ஒவ்வொரு அணுவும் சிவாலயமாக இருக்க, சிவத்தாண்டவம் நமக்குள்ளாக நடந்துகொண்டிருக்க, பார்க்க முடியாது தவிக்கிறோம். என்ன செய்வது என்கிற ஏக்கமும், ஆங்காரமும் அழகாய்ப் பேசுகிறது கவியில்.

**65**

சந்தை இரைச்சலில் சங்கீத சுகத்தை அனுபவிக்க முடியாது. நம்முடைய தத்துவக் கூச்சலுக்குள் சிவதாண்டவமும் ஒலிக்காது. சிவதாண்டவம் ஒலிக்காத பட்சம் சிவதரிசனமும் கிடைக்காதுதான். சிவதரிசனம் கிடைக்க வேண்டுமானால், சிவதாண்டவத்தின் ஓசை கேட்க வேண்டுமானால் ஆணவம் அடங்கவேண்டும், அதாவது மனம் தெளிய வேண்டும்.

**உரைஅற்ற(து) ஒன்றை**
**உரைசெய்யும் ஊமர்காள்**
**கரைஅற்ற தொன்றைக்**
**கரைகாணல் ஆகுமோ?**
**திரைஅற்ற நீர்போல**
**சிந்தை தெளிவார்க்குப்**
**புரைஅற்(று) இருந்தான்**
**புரிசடை யோனே**

உரை அற்ற ஒன்று - வார்த்தைகளால் விளக்கமுடியாத செம்பொருள்;

கரை அற்ற ஒன்று - முடிபு என்றோ மூலம் என்றோ ஒன்றும் இல்லாத தனிப்பொருள்; ஊமார்காள் ஊமையன்போல விளங்காத முறையில் எதை எதையோ சொல்லி உளறுகிற ஆசாமிகளே. இறைவனைப்பற்றி எவ்வளவு தான் எடுத்துச் சொன்னாலும் அது உண்மையாகாது. இதை உணராது 'விளக்கிவிட்டோம்' என்று மகிழ்ந்திருக்கிற பேர்வழிகள், விளக்கமாகத் தெரிவித்துவிட்டோம். நாம் தெரிவித்த தைக் கேட்பவர்களும் விளங்கிக்கொண்டு விட்டார்கள் என்று மகிழ்கிற ஊமையனை ஒத்தவர்கள் தான் என்பது கருத்து.

திரை அற்றநீர் - அலை இல்லாமல் அலைக்கும் காரணமாகிய காற்றும் இல்லாமல் தெளிவாய் இருக்கிற தடாகநீர்;

புரை அற்று இருந்தான் - தெளிவாய்த் தரிசனம் கொடுப்பான், கண்ணாடிப் போல;

புரிசடையோன் - முறுக்கு விழுந்து கற்றை கற்றையாய்த் தொங்குகிற சடா தரனாகிய இறைவன்தான்.

**66**

எங்குமாய் எல்லாமாய் நிறைந்திருக்கிறுன் இறைவன். எல்லாவற்றையும் கடந்து நிற்கிறுன் இறைவன். அப்படியாளுல் நான் எங்கிருத்து எந்த முறையில் வழிபடுவேன் இறைவஃன என்று மயங்குதிருர் திருமூலர். மயக்கம் உத்சாகமாய்க் கவியில் பேசுகிறது.

**குஃலக்கின்ற நீரில்**
**குவலய நீரும்**
**அஃலக்கின்ற காற்றும்**
**அனலோ டாகாசம்**
**நிலத்திடை வானிடை**
**நீண்டகன்** றஃன
**வரைத்து வலஞ்செயும்**
**ஆறறி யேனே**

குஃலக்கின்ற நீரில் - ஓவென்று சுத்துறெ கடஃலப் போல; அலை, குமிழ், சுழல் முதலியலட்சோபலட்சம் தோற்றங்கள் சமுத்திரத்தில் உண்டாகின்றன. பரம்பொரு ளிடத்திலும் பேரண்டங்கள், வஸ்துக்கள் அவ்வளவும் தோன்றுகின்றன. அப்படியே பரம்பொருளிடத்தில் அடங்கிவிடுகின்றன. அத்தகைய பரம்பொருஃள.

வரைத்து - உருவப்படுத்தி;

வலம் செயும் ஆறு - வழிபடும் முறை;

அறியேன் - எப்படி என்று தெரியாதவஞய் இருக்கிறேன். அவனுக்குள் இருந்து தான் நான் அவஃன வணங்கமுடியும். அதாவது வணங்கி வழிபடுகிற என்ஃனச் சுற்றியும் நிறைந்திருக்கிறது அவனுடைய திருமேனி. அப்படியாளுல் நான் வணங் கும்பொழுது நீட்டுகிற காலும் அவஃன வணங்குகிற செயலில் கூடவா அவமரியா தை வேண்டும் என்பது கருத்து;

குவலய நீர் - குவலயமும் நீரும் (பூமியும் நீரும்)

அனல் - தீ;

ஆகாசம் - வான் (ஈதர்);

நிலத்திடை வானிடை நீண்டு அகன்றுன் - எங்கும் ஒரு தன்மைத்தாய் நிறைந்திருக்கிறுன் இறைவன்

**67**

தங்கச் சங்கிலி ஒன்றை அழித்து வளையலும், மோதிரமும் செய்து கொள்ளுகிறோம். வளையலும், மோதிரமும் தங்கச் சங்கிலியிருலிந்து வந்ததாகவும் சொல்லிக் கொள்ளுகிறோம்.

அதாவது அடிப்படையான தங்கத்தை மறந்தே விடுகிறோம். சாதாரண காரியங்களில் கூட இத்தகைய மறதி ஏற்படுவதென்றால் அதிநுட்பமான தத்துவ உண்மைகளில் ஏற்படுகிற மறதியைப்பற்றிக் கேட்க வேண்டி.யதில்லைதான்.

இறைவனுடைய ஆனந்தக் கனவு ஒன்றுதான் உண்மையானது. மற்றைய வஸ்துக்கள் (வெறும் வடிவங்கள்) அவ்வளவும் பொய். இந்த உண்மை நம்மைவிட்டு ஒடியே போய் விட்டது. சரி, வஸ்துக்களே பொய். அதாவது பொக்கான வெறும் தோற்றங்கள்தான் என்றான பிறகு, அத்தகைய வஸ்துக்களுக்கு உண்டாக்குதல், காப்பாற்றுதல் முதலிய. சக்தி எப்படி. இருக்கமுடியும்? சக்தி அவ்வளவும் உண்மைப் பொருளாகிய இறைவனுக்குரியதுதான் என்பதையும் மறந்துவிட்டோம். இப்படியாக மறதியும், மயக்கமும் நிறைந்த நம்முடைய சின்னஞ்சிறு இதயத்திற்கு ஆணவத் திரை வேறு குறுக்கே கிடக்கிறது. இறைவனும் எட்டாத பரவெளியாய் ஒதுங்கி விடுகிறான். எப்படி என்று பார்க்கலாம்.

**உருஅன்றி யேநின்று**
**உருவம் புணர்க்கும்**
**கருவன்றி யேநின்று**
**தான்கரு வாகும்**
**அருவன்றி யேநின்ற**
**மாயப்பி ரானைக்**
**குருவன்றி யாவர்க்கும்**
**கூடஒண் ணாதே**

உரு அன்றி நின்று - உருவம் இல்லாத ஆனந்தக் கனவு ஒன்று,
உருவம் புணர்க்கும் - வஸ்துக்களின் பொய்யான தோற்றங்குளும், வடிவங்களுக்கும் ஆதாரமாய் இருக்கிறது;
கரு அன்றி - உண்டாக்குதல் என்கிற தத்துவம் (தனக்கே உரியதாக) வேறு எங்கும் இல்லையாக;
தான் நின்று கருவாகும் - தானே தாயாக இருந்து ஒவ்வொன்றிற்கும் மூலமாய் விளங்குகிறது அந்த ஆனந்தக் கனவு;
அரு அன்றி நின்ற - தெளிவாய்ப் பார்த்து அனுபவிக்கத்தக்க முறையில் எங்கும் நிறைந்து விம்மி இருக்கிறன் இறைவன். ஆனாலும்
மாயப்பிரான் - மயக்கம் கொண்ட ஆணவக் கண்களுக்குப் புலப்படாமல் மறைந்துகிடக்கிறன். அத்தகைய இறைவனை அடைந்து கலக்க வேண்டுமானல்

மயக்கம் தெளியவேண்டும். ஆணவம் விலக வேண்டும். அவையே இறைவனோடு நம்மைச் சேர்ப்பிக்கும் குருமூர்த்தியாகும் என்பது கருத்து.

**68**

சுற்றி இருக்கிற மாணவர்களிடம் தத்துவம் ஒன்றை விளக்கிக் கொண்டிருந் தார் குருநாதர். எட்டிய தொலைவிலிருந்து கட்டு, கட்டு என்ற ஓசை காதில் விழுந்தது. குருநாதர் மாணவன் ஒருவனை அழைத்து சத்தம் வருகிற இடத்திற்குப் போய் என்ன வேலை நடக்கிறது என்று பார்த்து வரக் கட்டளை இட்டார். மாணவனும் தச்சனுடைய பட்டறைக்கு ஓடிவந்தான். அப்பொழுது யானை ஒன்றைச் செய்து கொண்டிருந்தார்கள். மாணவனோ யானைக்குக் கடைகிற காலையும், செதுக்குகிற பலகையையும் பார்த்தான். ஓடி வந்து "குருநாதரே அங்கு நடைபெறுகிற காரியம் யானை" என்று சொன்னான். குருநாதர் கேட்டார், "யானையை என்ன மரத்தினால் செய்கிறார்கள்" என்று. மாணவனோ தலையைச் சொரிய ஆரம்பித்துவிட்டான். "அதைக் கவனிக்க மறந்துவிட்டேன்" என்று முனகினான். மாணவனுடைய குரலில் உயிர் என்பது இல்லை.

குருநாதர் மற்றொரு மாணவனை அழைத்தார். தச்சனுடைய பட்டறைக்குப் போய் என்ன மரத்தில் வேலை நடக்கிறது என்று பார்த்துவரக் கட்டளை இட்டார். மாணவனும் பட்டறைக்கு வந்து சேர்ந்தான். தச்சன் கடைகிற மரத்துண்டையும், சிராய்ப்பொடியையும் எடுத்து முகர்ந்து பார்த்தான். இழைக்கிற கட்டையையும் செதுக்குகிற பலகையையும் சுரண்டிப் பார்த்து. மரம் தேக்குத்தான் என்று முடிவு கட்டினான். குருநாதரிடம் வந்து "வேலை தேக்க மரத்தில் நடைபெறுகிறது" என்று சொன்னான். குருநாதர் கேட்டார் "அப்பனே தேக்க மரத்தில் என்ன வேலை நடை பெறுகிறது" என்று. முதல் மாணவன் போல் இவனும் தலையைச் சொரிய ஆரம்பித்து விட்டான். உயிர் இல்லாத குரலில் "நான் கவனிக்கவில்லையே" என்று விழித்தான்.

யானையைப் பார்த்தவனுக்கு மரம் இன்னதென்று தெரியவில்லை. மரத்தைப் பார்த்தவனுக்குப் பிராணி இன்னதென்று தெரியவில்லை. அதே போலப் பொருள்களை உண்மையென்று மயங்குகிறவனுக்குப் பரம் பொருள் தெரிகிறதில்லை. பரம் பொருளை அனுபவிக்கிறவனுக்கோ பொருள்கள் தெரிகிறதில்லை. ஒவ்வொரு வஸ்து வும் பரம் பொருளாய்த் தெரிந்துவிடும்.

**மரத்தை மறைத்தது**
**மாமத யானை**
**மரத்தில் மறைந்தது**
**மாமத யானை**
**பரத்தை மறைத்தது**
**பார்முதல் பூதம்**
**பரத்தில் மறைந்தது;**
**பார்முதல் பூதம்**

பரம் - உண்மைப் பொருளாகிய பரம்பொருள்;
பார் முதல் பூதம் - நிலம், நீர், தீ, காற்று, ஆகாயம் என்கிற ஐந்து பூதங்கள்.

மரத்தை, மரத்தில் என்கிற வார்த்தைகளில் ஒலிக்கிற "ஐ" "இல்" என்கிற இரண்டு. அங்கங்களேயும் முறையே இரண்டாம் வேற்றுமை உருபு, ஏழாம் வேற்றுமை உருபு என்று இலக்கண ஆசிரியர்கள் சொல்லிவிடுவார்கள். ஆனல் வேற்றுமை. உருபுகள் சாதிக்கற காரியங்களே இலக்கண ஆசிரியர்கள் சொல்ல முடியாது. தமிழ் பாஷையிலுள்ள வேற்றுமை உருபு போன்ற அங்கங்களேயும் நொடிகளேயும் பற்றி வெளியிட வேண்டுமானல் ஒரே ஒரு சாதனம்தான் உண்டு. கவி என்கிற சாதனம்தான் அது. வேற்றுமை உருபுகள் சாதிக்கிற காரியங்களுக்கு ஏற்றபடி எல்லாம், "மறைத்தது" என்றும் "மறைந்தது" என்றும் வல்லோசையும் மெல்லோசையும் வந்து ஒத்துழைக்கின்றன.

## ஆனந்தத்தின் தொனி

**69**

சமுத்திரத்தில் காற்று பலமாய். அடிக்கிறது. பிரிஜ் ஆட்டம் கப்பலில். மேஜை நடுங்குகிறது. விளேயாட லாயக்கில்லாத முறையில் இப்படியும் அப்படியும் ஆடுகிறது மேஜை. ஆணி ஒன்றைக்கொண்டு மேஜையின் காலோடு அடித்துவிட்டார்கள் கப்பலின் பணியாட்கள் அவ்வளவு தான், மேஜைக்கு. நடுக்கமும் இல்லே, ஆட்டமும் இல்லை. விளேயாட இப்பொழுது உபயோகமாய் இருக்கிறது மேஜை. விடாது புயல் சமுத்திரத்தில் வீசி என்ன செய்ய 2

மனித வாழ்க்கை இருக்கிறதே அதுவும் மேஜை மாதிரி தான். இறைவனுடைய செயல்தான் அவ்வளவும் என்ற உண்மை நிலேயோடு ஓட்டிவிட்டால் சுற்றி நடப்பது ஏதானுலும் நம்மைப் பாதிக்காது. இறைவனுடைய சன்னிதானத்திற்குள் நுழைந்துவிடலாம் கவலே இல்லாமல்.

இது சம்மந்தமாகத் திருமூலர் சொல்வதைப் பார்க்கலாம்.

**வான் நின்(று) இடிக்கில்என்**
**மாகடல் பொங்கில்என்**
**கரன் நின்ற செந்தீக்**
**கலந்துடல் வேகில்என்**
**தான்ஒன்றி மாருத**
**சண்டம் அடிக்கில்என்**
**நான்ஒன்றி நாதனே**
**நாடுவன் நானே**

இடிக்கில் என் - இடிக்கூட்டம் தாக்கினல் என்ன,
கால்நின்ற - காற்ருேடு கலந்து வீசுகிற.

தான்ஒன்றி - யதேச்சையாக.
மாருதசண்டம் - பெரும்புயல்.

கவி அற்புதமான கவி. தாளமும் விஷயமும் அற்புதமாய்க் கலந்து உருவங் கொண்ட கவி.

**70**

இறைவனுடைய திருவருளில் கலந்துவிடுகிறவர்கள் சுற்றி உள்ளவர்களுடன் பமக முடியாது, ஒட்டவும் மடியாது. தத்துவங்களும் வியாக்யானங்களும் அவர்களு க்குத் தேவை இல்லைதான். தெளிவாகச் சொல்லப் போனால் இறைவனுடைய சத்தி பெற்றவர்கள் இறைவனைக் கூட வணங்கவேண்டியதில்லை. இறைவன் வேறு தான் வேறு என்கிற பாகுபாடு இருந்தால் அல்லவா வழிபாடு வேண்டும். தாம் வணங்க வேண்டிய பொருள் தாமாகவே இருக்க வணங்குவது சரி இல்லைதான்.

**இணங்க வேண்டா**
**இனிஉல கோருடன்**
**நுணங்கு கல்வியும்**
**நூல்களும் என்செயும்**
**வணங்க வேண்டா**
**வடிவை அறிந்தபின்**
**பிணங்க வேண்டா**
**பிதற்றை ஒழிமினே**

இணங்க வேண்டா - பழக வேண்டியதில்லை. தாய் என்றும் தந்தை என்றும் மனையாள் என்றும் மக்கள் என்றும் அருமை பாராட்டுகிற காரியம் போய்விட்டது. |
நுணங்கு - எதையும் நுட்பமாக ஆராய்ந்து பார்க்கிற.
என் செயும் - ஒன்றுக்கும் உதவாது.
வடிவை அறிந்தபின் - இறைவனுடைய தரிசனம் கிடைத்த பிறகு.
பிணங்க வேண்டா - ஊடலும் கூடாது, பிகுப்பண்ணவும் முடியாது, அப்படியே அவனுடன் கூடவேண்டியதுதான்.

**71**

இறைவனுடைய அருள் பெற்றவர்கள் அழிவு மயமாய் ஆனந்தமயமாய் விளங்குகிறார்கள். மயக்கமும் மயக்கத்தின் மூலம் ஏற்படுகிற துயரமும் அவர்களை எட்டிப் பார்க்கிறது கூட இல்லை.

**பற்றற் றவர்பற்றி**
**நின்ற பரம்பொருள்**
**கற்றற் றவர்கற்றுக்**

**கருதிய கண்ணுதல்**
**சுற்றற் றவர்சுற்றித்**
**தொடர்ந்தஎன் சோதியைப்**
**பெற்றுற் றவர்கள்**
**பிதற்றொழித் தாரே**

பற்றற்றவர் - ஞானிகள், அடியார்கள்.

கற்று அற்றவர் - இறைவனைக் கருதாமல் கற்றவை அவ்வளவும் பொய் என்று தள்ளிவிட்டவர்கள்.

சற்று - இறைவனை அறிவதையே கல்வியாக வைத்துக் கற்று.

கருதிய - அத்தகைய உண்மைக் கல்வியால் ஆராய்ந்து பார்க்க, அதற்குப் புலனாவான் கண்ணுதல்.

பிதற்று - மயக்கம், துயரம், புலப்பம்.

**குறிப்பு:-**

இந்தப் பாடலில் உள்ள வல்லோசையைக் கவனிக்க வேண்டும். விஷயத் தோடு ஓட்டி ஒலிக்கின்றன. இதேபோல் அடுத்த செய்யுளில் உள்ள மெல்லின எதுகையும், மூன்றும் செய்யுளில் உள்ள இடையின எதுகையும் ஒரு தொடராக வந்துள்ளன.

**72**

இரண்டு சகோதரர்கள், நாடகத்தில் நடித்துப் பேரும் புகமும் பணமும் சம்பாதி த்தவர்கள். தமையன் கதாநாயகனாகவும், தம்பி கதாதாயகனுடைய எதிரியாகவும் நடிப்பது வழக்கம். தங்களுடைய வேஷத்திலும், பேச்சிலும், நடிப்பிலும், எவ்வளவோ அக்கறை காட்டி வந்தார்கள் இருவரும். இரவு பகல் பாராமல் முப்பத்தைந்து. ஆண்டுகளையும் ஒருவரை ஒருவர் எதிரியாகப் பாவித்து இரண்டுபேரும் தங்கள் தங்கள் காரியத்தில் முனைந்து நின்றார்கள்.

அவர்களுடைய நாடக வாழ்க்கையும் முடிந்து விட்டது. இரண்டு பேரும். சௌகர்யமாக இப்பொழுது வீட்டில் இருக்கிறுர்கள். எதிரிகளாக ஒருவரை ஒருவர் கச்சை கட்டுவதும் இல்லை. வேஷம் தயாரிப்பதும் இல்லை. பழிப்பதோ, புகழ்வதோ ஒன்றுமே இல்லை.

இறைவனுடைய ஆனந்தக் கனவில் நடக்கிற நாடகம் ஒன்றுதான் பேரண்டங் களும், வஸ்துக்களும். நாடகம் என்பது தெரியாதவரை பழிப்பும் புகழ்ச்சியும் இருக்க த்தான் செய்யும்.

இறைவனுடைய நாடகத்தை அறிந்து நம்முடைய வேஷத்தைக் களைந்து விட்டால் பிறகு. இறைவனோடு சேர்ந்து விட வேண்டியதுதான். இறைவனுடன்

சேர்ந்த பிறகு வழிபடுவதற்கோ வாழ்த்துவதற்கோ ஒன்றும் இல்லை. ஆனால் இறைவனைச் சேரவேண்டுமென்கிற குறிக்கோள் இல்லாமல் உபசாரத்திற்காக வழி பட்டும் வாழ்த்தியும் வருகிற ஆசாமிகளுக்குப் புலனாகவா செய்யும் உண்மை? புலனாகாதுதான்.

**தானவரை அற்றபின்**
**யாரை வரைவது**
**தான்அவன் ஆன பின்**
**யாரை நினைவது**
**காமனை வென்றகண்**
**ணாரை உகப்பது**
**தூமொழி வாசகம்**
**சொல்லுமின் நீரே.**

வரை அற்றபின் - எங்கும் நிறைந்த பரம்பொருளோடு கலத்த பின்பு.
யாரை வரைவது - வழிபட யார் இருக்கிறார்கள்.
யாரை நினைவது - யாரைத்தான் வாழ்த்த முடியும்.
காமனை வென்ற கண்ணார் - சிவபெருமான்.

சிவபெருமானை வாழ்த்த வேண்டும், வழிபட வேண்டும் என்று கத்துகறவர்க ளே, நானே சிவனாகிவிட்ட பின்பு, யாரை வாழ்த்துவேன், யாரை வணங்குவேன். வாழ்த்துவதற்கு வார்த்தைகள் கூட இல்லையே! இருந்தால் நீங்களே சொல்லுங்கள்.

**73**

திருவிழாக் கூட்டம். தாயிடமிருந்து குழந்தை பிரிந்துவிட்டது. அழுது கொண் டிருக்கிற குழந்தையை ஒரு ஆசாமி தேற்றினார். தாயிடம் ஒப்படைத்துவிடுவதாக உறுதி கூறினார். வீட்டிற்குக் குழந்தையைக் கூட்டிவந்து பலவகைப் பொருள்களையும் காட்டினார். குழந்தையும் ஒருவாறு அழுகையை நிறுத்தி ஊதுகுழலை எடுத்து ஊதியது. மின்சாரத்தால் . ஆடும் மயிலின் தலையைப் பிடித்துக் கொஞ்சியது. மிட்டாய்களை வாயில் போட்டுச் சப்பிக் கொண்டது. தாளையும் பென்சிலையும் வைத்துக் கிறுக்கியது. இப்படியாகக் கழிந்தது சில நாழிகை.

தாயின் குரல் வாசலை ஒட்டிக் கேட்டது. அவ்வளவு தான், ஒரே பாய்ச்சலாகத் தாயின் மடியில் போய்க் குதித்தது குழந்தை. ஆனந்தத்தால் விம்மி விம்மி அழுத்து, கொஞ்சியது. பிறகு தாயும் குழந்தையும் அவர்களுடைய வீட்டிற்குப் போய்விட்டார் கள். ஊதுகுழல், ஆடும் மயில், பேப்பர், பென்சில், மிட்டாய் ஒன்றையும் எடுக்காமல் போய்விட்டது குழந்தை.

இனி, இறைவனைத் தெரியாமல் பிரபஞ்சம் அவ்வளவும் கதறுகிறது. எதை எதையோ கண்டு பொழுது போக்குகிறது. இறைவன் தரிசனம் கொடுத்துவிட்டால்,

**ஒழிந்தேன் பிறவி**
**உறவென்னும் பாசம்**
**கழிந்தேன் கடவுளும்**
**நானும்ஒன் றுனேன்**
**அழிந்தாங் கினிவரும்**
**ஆக்கமும் வேண்டேன்**
**செழும்சார் புடைய**
**சிவஊனக்கண் டேனே**

அழிந்தாங்கு இனிவரும் - நிஊல இல்லாமல் தோன்றி மறைகிற பொருள்கள். தாய் என்றும், தந்தை என்றும், மஊனயாள் என்றும், மக்கள் என்றும், சொத்தென்றும், சுகம் என்றும் மாறி மாறி வருகிற தோற்றங்கள்.

செழும் சார்பு உடைய - உண்மை இதயம் ஒன்றையே சார்ந்திருக்கிற.

**குறிப்பு:-**

கவியில் ஆனந்த வெறி கும்மாளிபோட்டு ஒலிக்கிறது. ஒழிந்தேன், கழிந்கேன், ஒன்றுனேன், கண்டேன்; சேர்ந்தேன் என்கிற வார்த்தைகளில் துணிவும் தெளிவும் விழுந்து விழுந்து கூத்தாடுகின்றன. அற்புதமான கவி. பாடப் பாடச் சிவமணம் கமமும் கவி.

“பற்றற்றவர்” என்கிற கவியைப் “பிதற்றெழிந்தாரே” என்று படர்க்கையிலும், அடுத்த கவியைச் “சொல்லுமின் நீரே” என்று முன்னிஊலயிலும், இந்தக் கவியை “சிவனைக் கண்டேனே” என்று தன்மையிலும் முடித்திருக்கிற காரியம் அருமையான நாடகப் பாங்கைக் காட்டுகிறது. சிவஊனக் கண்ட எனக்கு யாரும் நிகரில்ஊல தான் என்று அடுத்த கவி முடிகிறது. அது நாடகப் பாங்கன் உச்சநிஊல.

**74**

கடவுளே என்ஊன வந்து அழைக்கிறுர். கடவுஊளத் துஊணயாகக் கொண்டு கடவுஊளயே சேரப்போகிறேன் நான். வெறுப்போ, மகிழ்ச்சியோ, உறவோ, பகையோ எனக் கேது? ஒன்றும் இல்லாதவன் நான்.

**நமன்வரின் ஞானவாள்**
**கொண்டே எறிவன்**
**சிவன்வரின் நானுடன்**
**போவது திண்ணம்**
**பவம்வரும் வல்விஊன**
**பண்டே அறுத்தேன்**
**தவம்வரும் சிந்தைக்குத்**
**தான் எதிர் ஆரே**

நமன் - மரண பயம்.
பவம் வரும் வல்வினை - பிறவிக்குக் காரணமாகிய நல்வினை.
பண்டே - ஏற்கனவே.
தவம் வரும் - இறைவனுடைய அருள் நிறைந்திருக்கிற,
எதிர் யார் - விரோதமாக ஒன்றும் நடவாது.

**75**

பேரண்டங்கள் அவ்வளவையும் தனக்குள் வைத்து ஆடுகிற பரம்பொருள் ஒன்றிருக்கிறது. அதுதான் சிவபுரம். சிவபுரத்தின் திருவிளையாடல் தான் உண்மை. மற்றவை அவ்வளவும் வெறும் தோற்றங்கள் கான். இந்த உண்மையைத் தெரிந்து தியானிக்கிறுர்கள் ஞானிகள். அவர்கள் ஆனத்தமயமாய் இருக்கிறுர்கள்.

**ஒன்றுகண் டீர்உல**
**குக்கொரு தெய்வமும்**
**ஒன்றுகண் டீர்உல**
**குக்குயிர் ஆவது**
**நன்றுகண் டீர்இனி**
**நமச்சிவா யப்பழம்**
**தின்றுகண் டோர்க்கது**
**தித்தித்த ஆறே**

நன்று கண்டீர் - இறைவன்தான் உண்மை என்று அறிகிற காரியம் ஒன்றுதான் செம்மையான காரியம்.
நமச்சிவாயப் பழம் - எல்லாம் அவன் செயலே என்று தெரிந்துவிடுவது பேரானந்த மயமானது.
அந்தக் கனியை தின்று கண்டோர் - ஓட்டி அனுபவிக்கிற ஞானிகள்.
தித்தித்த ஆறு - பரமானந்த வெள்ளத்தில் கலந்துகொள்கிறுர்கள்.

**குறிப்பு:-**

நாமும் அந்த வெள்ளத்தில் கலக்க வேண்டாமா என்று கெஞ்சுகிறது கவி.

## விளையாட்டு ஒன்றுதான்

**76**

வாழைப்பூ ஒன்று போதும் அனுபவிப்பதற்கு. வாழைப் பூவின் உருவமும் அமைப்பும் அறிய அறிய அனந்தத்தைச் சுரந்துகொண்டே இருக்கும், வாழைப்பூவின் உடல்கட்டும் மென்மையான, ஆனுல் உறுதி மிக்க நரம்புகளின் ஓட்டமும் பூவின் மேனியில் சரிந்து விளையாடுகிற வர்ண ஜாலங்களும் நம்மை ஆனந்தக் கடலில் முக்கிவிடும் என்றுல் குற்றம் இல்லை.

வாழைப் பூவை நம்மவர்கள் எப்படியெல்லாமோ அனுபவித்திருக்கிறுர்கள். வாழைப் பூவைப்போலக் கோயில்களின் ஒவ்வொரு தூண்களிலும் செதுக்கி அனுபவித்திருக்திறுர்கள். வீடுகளிலும் அரண்மனைகளிலும் நடைபெறுகிற மரவேலை களில் வாழைப் பூவைச் செதுக்கி இழைத்து அனுபவித்திருக்கறுர்கள்.

தமிழ்மக்கள் ஆனந்தமாய் அனுபவிப்பதற்கு மூலமாய் இருக்கிறது வாழைப்பூ. இப்படியாக ஒரு சமுதாயத்தார் ஒரு பொருளைப் பலவிதமாகப் பாராட்டி அனுபவி க்கிற தென்றால், அப்படி அனுபவிக்கிற காரியத்துக்கு மூலமாயுள்ள வஸ்துவை துறை என்று சொல்லி இருக்கிறது.

வஸ்துக்களை இப்படியெல்லாம் அனுபவிக்கிறதைப் போன்று குணங்களிலும். எத்தனையோ அம்சங்களைப் பாராட்டி அனுபவிக்க முடியும். அப்படி அனுபவித்துப் பலவிதமாக விளையாடுவதற்கு மூலமான குணபாவங்களையும் துறை என்று சொல்ல வேண்டும். உதாரணமாக ஒன்றைப் பார்க்கலாம்.

இளம் தம்பதிகள் ஒருவரை ஒருவார் பிரிந்து வாழ்வது என்பது சங்கடமான காரியந்தான். மழைக் காலத்தில் இத்தகைய சங்கடம் அதிகமாகிக் கொடூரப்படுத்தும் என்பது ஒரு ஐதீகம். ஐதீகம் ஒருபுறம் இருக்க மழைக் காலம் பிரிந்திருக்கும் தம்பதிகளை வேதனைக்குள்ளாக்கும் என்பது இயல்பான காரியம்தான். அதேபோல சாயங்கால நேரமும் பிரிந்த தம்பதிகளை எப்படியெல்லாமோ வேதனைக்கு ளாக்கும். இது அதிசயமான காரியந்தான்.

தொண்டைமான் இளந்திரையன் ஒரு சிற்றரசன். அவன் நாயகியைப் பிரிந்து அரசாங்க காரியங்களைப் பார்க்கவேண்டி ஏற்பட்டது. பிரிவு காரணமாக நாயகி வேதனைப்படுகிறுள். மாலை நேரத்தில் வேதனை பொறுக்க முடியாமல் புலம்பி விடுகிறுள். எப்படி.

**ஆழி இழைப்பப்**
**பகல்போம் இரவு வரின்**
**தோழி தணையாத்**
**துயர்தீரும் - வாழி**
**நறுமாலை தாராய்**
**திரையவஓ என்னும்**
**சிறுமாலை சென்றடைந்த**
**போழ்து**

நாயகன் வந்துவிடுவானு என்பதைத் தெரிய நாயகி கண்ணை மூடிக்கொண்டு மணலில் வட்டம் போடுகிறுள். சில வட்டங்கள் கூடும். சில வட்டங்கள் கூடாமலே போய் விடும். கூடினுல் நாயகிக்கு வந்துவிடுவான் என்று திருப்தி. கூடாவிட்டால் வரமாட்டான் என்று அதிருப்தி. இப்படி நாயகி வட்டம் (அழி) போட்டு வட்டம் போட்டுப் பகல் பொழுதை எப்படியோ தள்ளிவிடுகிறுள். இரவு நேரத்திலோ தோழி

மார்கள் வந்து வம்பளக்கிறுர்கள். அது காரணமாக நாயகிக்குத் தூக்கமே வந்து விடுகிறது. ஆனுல் இந்தப் பாழாய்ப் போன மாலை நேரம் இருக்கிறதே இதிலிருந்து விடுபட முடியவில்லை. இந்த மாலை வேளையில், "திரையனே உன் மாலையைத் தரமாட்டாயா" என்று கதறி விடுகிறுள்.

இப்படியாக மாலைக் காலத்தைக் கருப்பொருளாக வைத்துக் காதல் துறையில் நாடகம் போடுகிற கவிகள் தமிழில் அனந்தம். அவை ஒவ்வொன்றும் "மாலை மயக்கம்" என்றெ துறையைச் சார்ந்தவை யாகும்.

--- ---- ---- ---- ---- ---- ---- ---- ---- ---- ----

சிவபெருமானுடைய ஆனந்த நடனம் இருக்கிறதே அதுவும் அறிந்து அனுபவிப்பதற்கு ஏற்ற கருப்பொருள் தான். எத்தனையோ பக்தர்கள் அந்த நடனத்தை அனுபவித்து விளையாண்டு இருக்கிறுர்கள். காதல் கண்ணுேடெல்லாம் பார்த்து அனுபவித்து விளையாண்டு இருக்கிறுர்கள். அப்படியாகப் பக்தர்கள் விளையாடுவத ற்கு ஆனந்த நடனம் துறையாக இருக்கிறது. திருமூலரும் ஆனந்த நடனத்தை அனுபவித்திருக்கிறுர். அவருடைய அனுபவம் எப்படிக் கவிதைகளாக உருவெடுத்து வந்திருக்கின்றன என்பதை இனிப்பார்ப்போம்.

சிவபுரத்தில் சிருஷ்டி (விளைவு) தத்துவம் நடந்து கொண்டே இருக்கிறது. சிவபுரத்தின் பேராற்றலைப் பிண்டம் பிடித்துப் போட்டுக்கொண்டே இருக்கிறது ஆனந்த நடனம். ஆனந்த தடனம்தான் வஸ்துக்கள், சக்தியும் அதுதான். சிவமும் அதுதான். நடனம் நடை பெறும் கோயில் (வஸ்துக்)களும் அதே நடனந்தான். அப்படி யாக நடன சொரூபியாக இருக்கிறுன் இறைவன்.

**எங்கும் திருமேனி**
**எங்கும் சிவசக்தி**
**எங்கும் சிதம்பரம்**
**எங்கும் திருநட்டம்**
**எங்கும் சிவமாய்**
**இருத்தலால் எங்கெங்கும்**
**தங்கும் சிவன் அருள்**
**தன் விளை யாட்டதே**

எங்கும் - ஒவ்வொரு அணுவிலும், அணுவிற்கு உள்ளும்வெளியும் எங்குமாக;
திருமேனி - சிருஷ்டித் தத்துவம் (வஸ்துக்கள்)தான்;
சிதம்பரம் - நடனசபை;
திருநட்டம் - ஆனந்த நடனம். (அவ்வளவும் சிவபுரத்தின் பேரருள்தான் நடனந்தான் என்பது கருத்து).

**குறிப்பு:-** சிவதாண்டவத்தின் நாதமே கவியில் ஒலிக்கிறது. இது முதலாக உள்ள நான்கு கவிகளும் காதல் ஒலி கொண்ட கவிகள்தான்.

**77**

சிருஷ்டித் தத்துவம் ஒவ்வொரு அணுவிலும் நடந்து கொண்டே இருக்கிறது. நமக்குள்ளும் அது நடந்து கொண்டே இருக்கிறது. காலத்தால் வேறுபடாமலும், இடத்தால் பேதப்படாமலும் ஒரே தொடர்ச்சியாய் நடந்து கொண்டிருக்கிறது சிருஷ்டி. அத்தகைய சிருஷ்டித் தத்துவத்தை அனுபவிக்கவேண்டும். அனுபவிக்க அனுபவிக்க ஆரா இன்பம்தான். இதைத் திருமூலர் எப்படி வெளியிடுகிறுர் என்று பார்க்கலாம்.

**திருமேனி தானே**
**திருஅருள் ஆகும்**
**திருமேனி தானே**
**திருஞானம் ஆகும்**
**திருமேனி தானே**
**சிவநேயம் ஆகும்**
**திருமேனி தானே**
**தெளிந்தரர்க்குச் சித்தியே**

திருமேனி - சிருஷ்டி தீதத்துவம், அனந்த நடனம்.

**குறிப்பு:-** பாடப்பாட நவநவமாய் ஒளி வீசுகிற அற்புதமான கவி.

**78**

நான்கு துலாம் எடையுள்ள . தங்கக் கட்டி ஒன்று இருந்தது. தங்கத்தை எடுத்துச் சங்கிலியாகவும், சரப்பளியாகவும், மோதிரமாகவும், வளையலாகவும். நகை செய்கிறோம். நகைகளான தங்கம் ஒரு துலாம். மீதம் மூன்று துலாம் தங்கமும் அப்படியே கட்டியாக இருக்கிறது.

நகைகளைப் பார்த்துப் பார்த்து நாம் ஆனந்தம் அடைகிறோம். ஒவ்வொரு நகையும் ஒவ்வொரு விதத்தில் ஆனந்தம் கொடுக்கிறது. இத்தனை ஆனந்தத்திற்கு மூலமாய் இருந்தது தங்கக் கட்டி, தங்கக் கட்டிக்கு மூலமாக இருந்ததோ தங்கம் என்கிற தத்துவம். அதாவது அணுச் சேர்க்கையின் மாயத்தால் விளைந்த ஒரு விளைவு. தத்துவம் ஒன்றில் விளைந்த அத்தனை நகைகளும் ஆனந்தத்தைக் கொடுப்பது போல, சிவபுரம் ஒன்றுதான் என்றாலும் அதில் விளைகின்ற ஒவ்வொரு வஸ்துவும் ஆனந்தமயமானவை தான்.

**ஆனந்தம் ஆடரங்(கு)**
**ஆனந்தம் பாடல்கள்**
**ஆனந்தம் பல்லியம்**
**ஆனந்தம் வாச்சியம்**
**ஆனந்தம் ஆக**
**அகில சராசரம்**
**ஆனந்தம் ஆனந்தக்**
**கூத்(து) உகந்தானுக்கே**

ஆனந்தக் கூத்து உகந்தானுச்கு - சதா ஆனந்த நடனம் ஆடிக்கொண்டிருக்கிற இறைவனுக்கு.

அகிலம் - அண்டங்கள், பேரண்டங்கள் அவ்வளவும்.

சரம் - இயங்குகிற பொருள்களும்,

அசரம் - இயங்காத பொருள்களும்.

ஆனந்தம் - ஆனந்தமான கருவிகள்தான். எப்படி என்றுல்,

ஆடரங்கு - ஒவ்வொரு வஸ்துவும் இறைவனுக்கு நடன சபையாகவும் இருக்கிறது.

பாடல்கள் - ஆனந்தமான பாடல்களாகவும் இருக்கிறது.

பல்லியம் - மத்தளமாகவும் இருக்கிறது.

வாச்சியம் - குழல் வாத்தியமாகவும் இருக்கிறது.

**குறிப்பு:-**

இறைவனுடைய சிருஷ்டி. ஒவ்வொன்றும் இறைவன் தான். ஆகவே இறைவன் என்பது இல்லைதான்.

**79**

ஆனந்த நடனம் எங்கும் நடைபெறுகிறது. ஆணவத்தை ஒடுக்கிவிட்டால் நடனத்தின் ஓசை தெளிவாகக் கேட்கும். நமக்கு உள்ளிருந்தம் வெளியே எட்டுத் திசைகளிலிருந்தும் ஓசை நம் காதில் விழும், நடனத்தின் தரிசனமே கிடைத்து விடும்.

**தெற்கு வடக்குக்**
**கிழக்கு மேற்(கு)உச்சியில்**
**அற்புதம் ஆன**
**ஐந்து முகத்தினும்**
**ஒப்பில்பேர் இன்பத்து**
**உபய உபயத்துள்**
**தற்பரன் நின்று**
**தனிநடம் செய்யுமே**

உபய உபயத்துள் தற்பரன் - சவம்+சக்தி இரண்டாகிய இரட்டையன், ஆனல் அவன் தற்பரன். அதாவது ஏகநாயகன் தான்.

**குறிப்பு:-**

கவி அற்புதமான உருவம் கொண்ட கவி. நடனமாகிய துறையில் விளையாண்ட கவிகளுக்கு முத்தாய்ப்பாய் வந்த கவி.

## தாண்டவக் கூத்து

**80**

சித்திரக் கலையின் மூலமாக உண்மை ஒன்றைத் தெரிந்து கொள்ளலாம். வேண்டியவரோ வேண்டாதவரே - அவர் நான்கு பேருக்குத் தெரிந்த பிரமுகராக இருந்தால் மேற்படி ஆசாமியை எத்தனையோ உருவங்களில் தீட்டி விளையாடுவது சித்திரக் கலையின் போக்கு, இது சாதாரணமாக நான்கு கோடுகளைக் கொண்டு சைச்ரிகர் தம் உணர்ச்சியோடு விளையாட வைக்கிற காரியம். இனி, கவிஞர்களும் வார்த்தைகளைக் கொண்டு ஒரு உண்மையை, எத்தனையோ முறைகளில் விளை யாண்டு காட்டுவார்கள்.

சித்திரம் கண்ணால் பார்த்தாலே போதுமானது. சாதாரணமாய் எல்லோரும் அனுபவிக்க முடியும். ஆனால் கவியினுடைய காரியம் அப்படி அல்ல. உணர்ச்சிக் கண் கொண்டு தெளிந்த அறிவுக் கண்கொண்டு பார்த்தால் மாத்திரம் அனுபவிக்க முடியும் கவியை.

கவியினுடைய காரியம் அப்படி இருக்கிற காரணமாகத் தான் ரொம்பப்பேர் கவிஞருடைய லட்சியத்தைப் பார்க்கத் தவறிவிடுகிறார்கள். வேண்டாத வியாக்யான ங்களுக்கும் வம்புகளுக்கும் தங்களைப் பலியாக்கிக் கொள்ளவும் செய்கிறார்கள்.

பரம்பொருளின் ஆனந்த நடனம் எங்கும், எப்பொழுதும் இடையறாமல் நடந்து கொண்டிருக்கிறது. திருமூலர் சிவநடனத்தை எப்படி எல்லாமோ அனுபவித்திருக் கிறார். திருமூலருடைய அனுபவத்தை வாங்கி - தமிழ்ப் பாஷை எப்படி விளையாடுகிறது என்று பார்க்கலாம்.

**காளியோ(டு) ஆடிக்**
**கனகா சலத்தாடிக்**
**கூளியோ(டு) ஆடிக்**
**குவலயத் தேஆடி**
**நீளிய நீர்தீக்கால்**
**நீள்வான் இடை ஆடி**
**நாள்உற அம்பலத்**
**தேஆடும் நாதனே**

காளி - பெருவெளிக்கான அகிலாண்ட சக்தி;
கனகா சலம் - மேரு;
கூளி - உயிர்களில் உள்ள சக்தி;
குவலயம் - பிருதிவி;
கால் - காற்று;
நாள்உற - காலமும் கணக்கும் இல்லாமல் ஒரே தொடர்ச்சியாக;
அம்பலம் - (Cosmos நிறைந்த) பொன்னம்பலம்.

**குறிப்பு: -**

எங்கும் நிறைந்த ஆனந்த நடனத்தை "ஒரு சில இடங்களைக் குறிப்பிட்டு இங்கெல்லாம் நடைபெறுகிற நடனம் என்று சொல்லும்பொழுது" கவிக்கு வேகம் உண்டாகி விடுகிறது. வேகம் விம்மி உருவம் பெற்று விடுகிறது கவி.

**81**

இறைவன் ஆடுகிறுன். அவனேடு சேர்ந்து சகலமும் ஆடுகின்றன. நாமும் அப்படித்தான்.

**ஆதிபரன் ஆட**
**அங்கைக் கனல் ஆட**
**ஓதும் சடைஆட**
**உன்மத்தம் உற்றாடப்**
**பாதி மதிஆடப்**
**பார்அண்டம் மீதாட**
**நாதமோ டாடினான்**
**நாதாந்த நட்டமே**

பரன் - பரமாய் நிற்பவன்;
கனல் - எல்லாவற்றையும் தன்வயமாக்கும் நிலை;
ஓதும் சடை - உண்மையைத் தெரிந்த அடியவர்கள் பாராட்டுகிற சடை, மேகம் என்றும், அகாயம் என்றும், அண்டமுகடு என்றும் அவர்கள் பாராட்ட அதற்கு மூலமாயுள்ள சடை;
நாதம் - தெளிவு;
நாதாந்த நட்டம் - தெளிவிற்கே மூலமாயுள்ள நடனம் அது;
"பாதி...மீதாட" - உருண்டு புரண்டு ஆடுதலால் சந்திரனுக்கு மேலாகவே பூமியும் அண்டமும் ஆடும் என்பது கருத்து.

**குறிப்பு:-**

தத்துவம் ஒன்று உண்மையோடு சமுதாயத்தில் நிலைத்துவிட்டால், அதை அனுபவித்து மக்கள் தங்களுடைய அனுபவத்தை வைத்து எப்படி எல்லாமோ பாராட்டுவார்கள். பாராட்டு மருவி மருவி தத்துவத்திற்கு வாய்ப்பான அடையாளப் பெயர்கள் ஆகிவிடும். கனல், நாதம் முதலியவை அத்தகைய அடையாளப் பெயர்கள்.

**82**

கவிக்குள் தாளமாக இருந்து ஆடுகிறதும் இறைவன் தான். பசுவிற்குள்ளாக இருந்து ரத்தத்தைப் பஞ்சகவ்வியமாக மாற்றுகிற அற்புதமும் இறைவன்தான். அப்படி எல்லாம் இறைவனுடைய திருநடனம் அற்புதத்திற்கும் அற்புதமாக இருந்து நடைபெறுகிறது.

**தேவரே டாடித்**
**திருஅம் பலத்தாடி**
**மூவரோ டாடி**
**முனிசனத் தோடாடிப்**
**பாவினுள் ஆடிப்**
**பராசக்தி யில்ஆடிக்**
**கோவினுள் ஆடிடும்**
**கூத்தப்பி ரானே**

தேவர் - ஒவ்வொரு பூண்டிலும் பிராணியிலும் உள்ள சக்தி;
திரு அம்பலம் - பரவெளி;
மூவர் - தோற்றம், இருப்பு, மறைவு என்று தோன்று மூன்று நிலை;
பரா சக்தி - பூரணத்தின் சக்தி;
கோ - பசு.

**குறிப்பு:-**

சைவசமயம் மிகமிகப் பழமையானது என்று சொல்வதில் சிலருக்குத் தயக்கம் ஏற்படுகிறது. காரணம், அவர்கள் சமயத்தை வாழ்க்கையோடு வைத்துப் பார்க்கவில்லை. பார்த்தால், அடடா, விவசாயத்திற்கு மூலமாயுள்ள பசுவையும் நந்தியையும் எப்படி எல்லாம் சைவ சமயம் தனதாக்கி வைத்திருக்கிறது என்பது தெரியவரும். அது தெரிந்தால் சைவசமயத்தின் பூர்வமான பழமையும் தெரிய வரும். பசுவினுடைய சாணத்தை ஒரு பிடி பிடித்து வைத்து அதில் ஒரு அறுகம்புல்லையும் நட்டுவைத்து, இரண்டு கண்களையும் மூடி அறுகம்புல்லையும் சாணத்தையும் வணங்க வைக்கிறது சைவசமயம். அவ்வாறு வணங்கி வழிப்டுகிற வர்களுக்கு எங்குமில்லாத ஆனந்தத்கையே கொடுத்துவிடுகிறது. அறுகம்புல் வழியாக இறங்கிவந்து சாணத்தில் தாண்டவமாடிவிடுதிறது சிவசொரூபம். எல்லாம் பக்கர்களுடைய கண்களுக்குத்தான்.

இப்படியாகச் காணத்தையும் அறுகம்புல்லையும் ஒரு சமுதாயம் முழுவதும் அனுபவிக்க முடிறெதென்றால், அப்படி அனுபவிக்க வழிசெய்து வைத்திருக்கிற சமயத்திற்கு வயது இவ்வளவுதான் என்று கணிக்க முடியுமா? பசுவினுடைய உதர்த்திலிருந்து வருகிற (பால், தயிர், நெய், கோமயம், சாணம்) ஐந்தையும் அல்லவா இறைவன் அபிஷேகம் பண்ணுகிறன் என்று சொல்லி இருக்கிறர்கள்.

**ஆன் என்பது தரும்ஐந்தையும்**
**ஆடும்பெரு மானை.**

**83**

சிவநடனத்தைத் தரிரத்தவர்கள் விடுத஌ பெற்றவார்கள். அவர்கள் இறுதி அற்ற பேரானந்தத்தில் கலந்து விட்டவர்கள். எப்படி?

**விம்மும் வெருவும்**
**விழும்அழும் மெய்சோரும்**
**தம்மையும் தாம்அறி**
**யார்கள் சதுர்கெடும்**
**செம்மை சிறந்த**
**திருஅம் பலக்கூத்துள**
**அம்மலர்ப் பொற்பாதத்(து)**
**அன்புவைப் பார்கட்கே**

விம்மும் - ஆனந்தத்தால் விம்முவார்கள்;
வெருவும் - அப்படியே நடுங்குவார்கள்;
மெய்சோரும் - புளகாங்கிதம் அடைவார்கள்;
தம்மையும் தாம் அறியார் - ஆணவம் அற்று விடுத஌ பெறுவார்கள்;
சதுர்கெடும் - வசம் அழிந்து பாசபந்தக் கட்டுகஐ அறுத்தெறிவார்கள்.
யார்? செம்மை சிறந்த - பேருண்மையாய், பேரறிவாய், பேரின்ப மயமாய் உள்ள;
அம்மலர் - அழகிய தாமரை மலர் போன்ற,
அதாவது சிருஷ்டித்தத்துவமே நிகழக்கூடிய;
பொற்பாதம் - திருவருள் மயமான திருவடிகளில்தானே;
அன்பு வைப்பார் - பக்திகொண்டு பரவசம் அடைந்தவர்கள்.

**84**

மாப்பிள்ஐயும் பெண்ணும் முதல் முதல் வெட்கப்பட்டுத்தான் பழகுகிறர்கள். நாளாக நாளாக ஒருவரோ டொருவர் கலந்து உயிருக்குயிராக உறவு கொண்டுவிடு கிறர்கள்.

நாட்கள் ஓடுகின்றன, மாதங்கள் கழிகின்றன. வருடம் தலையை வெளியே நீட்டுகிறது. பெண்ணின் உதரத்தை விட்டு மூக்கோடும், முழியோடும் குழந்தை என்றெ தெய்வீகக் கோலத்தில் ஜீவன் ஒன்று வெளியே வருகிறது.

பத்து மாதங்கள் தாயின் வயிற்றையே மாணிக்கத் தொட்டிலாக வைத்து வளர்ந்த குழந்தை, யாரிடமும் எதையும் கேட்காமல் உண்டு, உறங்கி, வளர்ந்த குழந்தை கண்ணைக் கசக்கியோ, காலைத் தேய்த்தோ, சங்கடப் படாமல் அவ்வளவு சௌகர்யமாக வளர்ந்த குழந்தை, வெளியே வந்துவிட்டது.

குழந்தைக்கு அதிகாரி நான்தான் என்று மார்பைத் தட்டிக் கொள்ளலாம் தந்தை, நானல்லவா வயிற்றோடு வயிறாய் வைத்துக் காப்பாற்றி வந்தேன் என்று தாயானவள் சொல்லிக் கொள்ளலாம். குழந்தையை உருட்டித் திரட்டிக் கொடுத்த சிருஷ்டித் தத்துவம் இருக்கிறதே அது வாயைத் திறந்து ஒன்றும் பேசுவதில்லை தான். பேசக்கூடியதாக இருந்தால், "அடடா, எங்கும் நிறைந்த ஆனந்த தத்துவம் அல்லவா தாய் என்றும் தந்தை என்றும், குழந்தை என்றும் விளைந்து கொண்டிருக் கிறது. அப்படி இருக்க, "நான் பெற்ற பிள்ளை, நான் பெற்ற பிள்ளை" என்று இவர்கள் ஏன் அடித்துக் கொள்கிறார்கள்" என்று சிரித்திருக்கும்.

சிருஷ்டி தத்துவம் சிரிக்கவில்லை என்றால் என்ன, திருமூலர் வாயைத் திறந்து சிரிக்கவே செய்கிறார். சிரிப்பின் ஒலி, தம் காதில் விமவே செய்கிறது.

**இட்டான் அறிந்திலன்**
**ஏற்றவள் கண்டிலன்**
**தட்டான் அறிந்தும்**
**ஒருவார்க்(கு) உரைத்திலன்**
**பட்டாங்கு சொல்லும்**
**பரமனும் அங்குளன்**
**கெட்டேன்இம் மாயையின்**
**கீழ்மைஎவ் வாறே**

இட்டான் அறித்திலன் - தந்தைக்குத் தெரியாது தான். குழந்தை எங்கிருந்து எப்படி அறிந்தா வைத்திருக்கிறான் தகப்பனாகிறவன். தகப்பனாகிறவனுக்கு அப்படி ஆராய்ச்சி பண்ணுகிறதா வேலை.

ஏற்றவள் கண்டிலள் - தாய்தான் அறிந்தாளா என்றால் அதுவும் இல்லை தான். பத்து மாதம் வயிற்றில் வைத்துச் சுமந்தவளுக்கே குழந்தை எங்கிருந்து வந்தது, எப்படி வந்தது என்று தெரியவில்லை.

தட்டான் - சிருஷ்டித் தத்துவம்.

பட்டாங்கு சொல்லும் பரமன் - உண்மையை ஒவ்வொரு அணுவிலும் வைத்து விளக்கிக் கொண்டிருக்கிற பரம்பொருள்.

கெட்டேன் - இறைவன்தான் அவ்வளவும் என்கிற உண்மையைக் தெரியாமல் அல்லவா கெட்டுவிட்டேன்.

மாயையின் சம்மை எவ்வாறு - அறியாமை எவ்வளவு ஆழமாக வேர் விட்டிருக்கிறது.

**குறிப்பு:-**

ஏக்கமும், எக்களிப்பும். அற்புதமாய்ப் பேசுகிறது பாடலில்.

**85**

குயிலானது தன் முட்டையைக் காக்கையின் கூட்டில் வைத்து விடுகிறது. காக்கை குயில் முட்டையைத் தன் முட்டையாகவே நிஜனத்து அடைகாக்கிறது. குஞ்சு பொரிக்கிறது. குயில் குஞ்சைத் தன் குஞ்சாக மயங்கி வளர்க்கவும் செய்கிறது.

ஆதரவு, வளர்ப்பு என்கிற காரியம் தொன்று தொட்டு வருகிற பழமையான தாய்ப் பண்புதான். அத்தகைய தாய்ப் பண்பில் இன்றைக்கொரு கொள்கை, நாஜளக்கொரு கொள்கை என்கிற மாறுபாடு உண்டாகவா செய்யும்? அது கிடக்கட்டும். குயிலின் குஞ்சைச் காக்கையே அவ்வளவு பாசத்தோடு வளர்க்கிறது என்றுல் தாய்மைக்கு யார் காரணம் கேட்க முடியும்? யார் தான் காரணம் சொல்ல முடியும்?

அவ்வளவும் அனுதிமயமான பாசம்தான். ஆனுல் அத்தகைய பாசம் இறைவ னுடைய திருவிஜளயாடல் தான் என்கிற உண்மையை உணர்கிறவர்களோ அரிதினும் அரிதாய் இருக்கிறுர்கள்.

நாமும் கடவுள் மயம், நம்முடைய குழந்தையும் கடவுள் மயம், நம்முடைய தாயும் கடவுள் மயம், நம் எல்லோரையும் சேர்த்து வைத்திருக்கிற அன்பும் கடவுள் மயம் என்று தெரிந்துவிட்டால் அனந்தந்தானே.

இனித் திருமூலரைப் பார்க்கலாம்.

**குயிற்குஞ்சு முட்டையைக்**
**காக்கைக்கூட் டிட்டால்**
**அயிர்ப்பின்றிக் காக்கை**
**வளர்க்கின் றதுபோல்**

**இயக்கில்லை போக்கில்லை**
**ஏனென்ப தில்லை**
**மயக்கத்தால் காக்கை**
**வளர்க்கின்ற வாறே**

அயிர்ப்பின்றி - சந்தேகமில்லாமல்.
இயக்கில்லை - மாறுதல் இல்லை.

**86**

ஒரு பெண் தாய், தந்தை, சகோதர சகோதரிகள் இவர்களிடம் மிக்க பிரியமாய் வளர்ந்து வந்தாள்.

மூன்று வேளையும் தாயோடு இருந்துதான் சாப்பிடுவாள். பன்னாங்குழி விளையாடுகிற காரியமானாலும் தாய் கூடத்தான் கட்சி சேருவாள். உறங்குகிற பொழுதும் தாயும் தானும் ஒன்றாகவே படுத்து உறங்குவதுதான் வழக்கம்.

பெண்ணிற்குக் கல்யாணம் ஆகியது. மாப்பிள்ளைக்குப் போர்னியோத் தீவில் வேலை. பெண்ணின் தாயும் தந்தையும், சகோதர சகோதரிகளும் கண்ணைக் கசக்கினார்கள். தோழிமார்கள் பட்ட துயரத்தையோ சொல்லமுடியாது. அருமையாக வளர்த்த பசுவும் கன்றும் திரும்பித் திரும்பிப் பார்க்கின்றன. பெண்ணோ மிக்க சந்தோஷத்தோடு கணவன் பின்னே போகிறாள். போர்னியோத்தீவிற்கே போய் விடுகிறாள்.. அவ்வளவுதானா, கணவனுடைய லாபநஷ்டம் இன்பதுன்பம் ஒவ்வொன்றிலும் ஈடுபட்டு விடுகிறாள். கணவனுக்கு மண்டையிடி என்றால் பெண்ணால் சாப்பிட முடிகிறதா, தூங்கத்தான் முடிகிறதா? அப்படி உண்டாகி விடுகிறது ஈடுபாடு.

இனிப் பெண்ணானவள் குழந்தையை வளர்க்கிற காரியம் இருக்கிறதே அது அற்புதமான காரியம்.

ஒரு திரளைச் சோற்றை ஊட்டி விடுவதற்காகக் குழந்தையை இடுப்பில் வைத்துக்கொண்டு, நிலாவைக் காட்டி முற்றத்தில் எத்தனை தடவை சுற்றிச்சுற்றி வருகிறாள் தாய். வயிற்றுக்குள் விளைந்து வந்த கனியை மார்பிலுந் தோளிலும் போட்டு அப்படியெல்லாம் அருமை பாராட்டா விட்டால் உயிர் வர்க்கங்கள் நிலைத்து நிற்கமுடியுமா?

தாயின் கருவில் விளைகிறது தனியான ஜீவன் அல்ல. பிரபஞ்சமே விளைகிறது என்றுதான் சொல்ல வேண்டும். அப்படியே தாயானவள் ஏதோ குழந்தையைக் காப்பாற்றுகிறாள் என்று சொல்லிவிட்டால் காணாது. பிரபஞ்சத்தையே காப்பாற்றுகிறாள் என்றுதான் சொல்ல வேண்டும்.

**"தாயோடு, எண்ணக்**
**கடவுளும் இல்"**

என்று முன்னோர்கள் சொல்லி இருப்பது உபசாரத்திற்காக அல்ல.

இனி, அடியார்கள் இறைவனைத் தாயாகவே பாவித்து வழிபட்டிருக்கிறார்கள். எங்கும் நிறைந்த ஆனந்த தத்துவம் படைத்துக் காப்பாற்றுகிற காரியம் தாயின் அற்புதச் செயல்தானே! இது சம்பந்தமாகப் பாரதம் பாடிய பெருந்தேவனார் சொல்வதைப் பார்க்கலாம்.

**எத்தகையாய்த் தாயாய்**
**இறைவனாய் எவ்வுயிர்க்கும்**
**முத்த மடுவுதவும்**
**மூலமாய் - அந்தமிலாப்**
**பூதமாய் வேதமாய்**
**நின்ற புராதனனை**
**ஓதவா நெஞ்ச**
**உணர்ந்து**

"எவ்வுயிர்க்கும், முந்தி மருவுதவும் மூலம்" என்றல்லவா இறைவனைச் சொல்ல முடிகிறது. தாய்மையின் புனிதமான அன்பும், தியாகமும், ஊழிஊழி காலமாக உயிர் வர்க்கத்தையே காத்துவருகிற செயலை அறிந்த பிறகு இறைவனைத் தாயாகத்தான் பாவிக்க முடியும்.

--- ---- ---- ---- ---- ---- ---- ---- ---- ---- ----

அணுவில் அணுவாய் அண்டத்தில் அண்டமாய் விளைந்து வியாபித்திருக்கிற பரம்பொருளுக்கு ஒவ்வொரு பொருளும் அரண்மனைதான். ஆனாலும் இறைவனை நாடும் ஞானிகள் பொருள்களின் மூலம் இறைவனைத் தரிசித்துவிட முடியாது. இறைவன் சப்பணம் போட்டு நிரந்தரமாகத் தங்கி இருக்கிற கொலு மண்டபம் ஒன்று உண்டு. தூய்மை என்கிற கொலு மண்டபத்தில் இறைவனுடைய பேரருளையும், பெரு நீதியையும் கண்ணாரக் கண்டு தரிசிக்கலாம். அண்ட பிண்ட சராசரங்கள் அவ்வளவையும் கடந்து நிற்கிற பரம்பொருள் தாய்த் தத்துவத்தைத் தேடி வந்து ஒட்டிக் கொள்கிறது. தாய்மையின் உன்னதமான தெய்வீகத்தை உணராத வரை சிவதரிசனமும் இல்லைதான்.

தாய்த்: தத்துவம் என்றும் குன்றாமல் நிலைத்து நிற்பதற்கு, அழியாத கவர்ச்சியைத் தாய்மைக்குச் சீதனமாகக் கொடுத்திருக்கிறது இயற்கை.

அழகு என்கிற தத்துவம் கோடானு கோடி ஆண்டுகள் தவமிருந்தல்லவா பெண்களோடு கூடிக் குலாவி இருக்கிறது. வீணையின் நாதமும், அமிர்தத்தின்

ருசியும் நாணிப் பின் வாங்கும்படி அவ்வளவு சுகமாய், அவ்வவவு குளுமையாய் வருகிறது பெண்களிடமிருந்து வார்த்தை. அவநம்பிக்கை, பயம், சூனியம் அவ்வள வையும் அழித்துச் சிரஞ்சீவித்வத்தையே கொடுத்துவிடுகிறது அவ்வார்த்தைகள். அத்தகைய வார்த்தைகளைப் பிச்சிப் பூவைக் கொட்டுகிறது போலக் கொட்டுகிற வாய். இருக்கிறதே, அட்டா, பவளம் போலச் சிவந்த அதரத்திற்குள்ளிருந்து ஒளி வீசுகிற குளிர்ந்த. முத்துக்களை வைத்திருக்கிற பொக்கிஷம் அல்லவா?

அழகும், அன்பும் கைகோர்த்துக் நடக்கிற தாய்மையை ஒட்டி அனந்தமயமான பரம்பொருள் வெளிப்படுகிறது. தாய்மையை ஆசையோடு பார்த்து அனுபவிக்கிறவர் களுக்குத்தான் எங்கும் நிறைந்த பரம்பொருள் தாய்மையில் கொலுவீற்றிருக்கிற காட்சியைத் தெரிய முடியும் என்கிறுர் திருமூலர்.

**அமரத்து வங்கடந்(து)**
**அணடங் கடந்து**
**தமரற்று நின்ற**
**தனிமையன் ஈசன்**
**பவளத்தின் முத்தின்**
**பனிமொழி மாதர்**
**துவளற்ற சோதி**
**தொடர்ந்துநின் றுனே**

அமரத்துவம் - மனம் என்கிற நுட்பம்.
தமரற்று நின்ற - பிடிபடாமல் விலகி இருக்கிற.
பவளம், முத்து, பனிமொழி மூன்றும் ஒன்றுய்க் குலவிக் கிடக்கின்றன.
துவளற்ற சோதி - நீங்காத, அசையாத அழகோடு.
தொடர்ந்து நின்றுன் - கலந்து வெளிப்படுகிறுன் இறைவன்.

**குறிப்பு:-**

நாயகியை நாயகன் ஆசையோடு பார்க்கிறது போல இறைவனைப் பார்க்க வேண்டும் என்று அடியார்கள் சொல்லுவார்கள். அடியார்கள் வேண்டுகிற ஆசையை அப்படியே அள்ளிக் கொடுக்கிறது கவி. அதிசயபாவம் செய்யுளின் ஓவ்வொரு சொல்லிலும் இருந்து நடனம் ஆடுகிறது.

திருமூலர் வருடமொன்றிற்கு ஒரு மந்திரமாக மூவாயிரம் வருடங்கள் யோகத்தில் அமர்ந்து மூவாயிரம் மந்திரங்களை அருளிச்செய்தார் என்பது வரலாறு. இது மிகைப்படுத்திக் கூறப்பட்டிருந்தாலும் நாம் நூலை வாசிக்கும் போது ஒவ்வொரு பாடலும் அற்புத வடிவம் பெற்று நமக்கு திருமூலரின் ஞானச்செல்வத் தைத் தெரிவித்த வண்ணம் மிளிர்கின்றது. அவர் அனுபவித்த உண்மைகளையும் அனுபவத்தையும் வடித்தெடுத்துப் பாடல்களில் அழகாகப் பட்டம் தீட்டி ஒளிரும்படி வைத்திருக்கின்றார்.

அணுவில் அணுவாய் அண்டத்தில் அண்டமாய் இருக்கும் பரம்பொருளின் ஆனந்தக் கூத்தை திருமூலர் நமக்கு உணர்த்தும் முறையே அலாதியாக அமைந்துள் ளது.

இவ்வாறு சிறந்த நூலிலிருந்து 86 பாடல்களை ஆசிரியர் எடுத்து அவற்றின் நயங்களை விளக்கி நமக்கு இப்புத்தகத்தை வரைந்துள்ளார். பாடல்களின் மடக்கு களையும், துள்ளல்களையும் ஆசிரியர் தாம் அனுபவித்தவாறு பிறரும் அனுபவிக்கும் வண்ணம் எடுத்துரைக்கிறார்.

**ஆனந்தம் ஆடரங்(கு)**
**ஆனந்தம் பாடல்கள்**
**ஆனந்தம் பல்லியம்**
**ஆனந்தம் வாச்சியம்**
**ஆனந்தம் ஆக**
**அகில சராசரம்**
**ஆனந்தம் ஆனந்தக்**
**கூத்(து) உகந்தானுக்கே**

என்று இறைவனின் சிருஷ்டி தத்துவத்தை எல்லோரும் ரஸித்து இன்புறும்படு ஆசிரியர் விளக்கத்தை எழுதியுள்ளார். மேலட்டையில் காணப்படும் ஆனந்தக் கூத்தை சித்திரிக்கும் ஓவியமும் சேர்ந்து இப்புத்தகம் கண்ணுக்கும் கருத்துக்கும் விருந்தாய் அமைந்துள்ளது.

- **தினமணி**

ஆனந்தக்கூத்து என்ற நூலில் ஆசிரியர் ல. ஷண்முகசுந்தரம் நன்கு சுவைத்த 86 பாடல்களை மட்டும் எடுத்துக் கொண்டு அவற்றிற்கு, தாம் ரசித்து அனுபவித்த முறையில், அதாவது ரசிகமணி டி.கே.சி. பாணியில், விளக்கம் தந்துள்ளார். இப் பாடல்கள் திருமந்திரங்கள் முழுவதிலிருந்தும் எல்லா தந்திரங்களிலிருந்தும் எடுக்க ப்பட்ட சுவை மிகுந்த பாடல்களாகும். திருமூலரின் கருத்துக்களை மட்டுமன்றி அவர் பாடல்களிலுள்ள கவி நயத்தையும் நன்கு வெளிப்படுத்தவல்ல நல்ல பாடல்கள் இவை. அசிரியர் தம் முன்னுரையில் கூறியிருப்பதைப்போல, திருமூலருடைய கவிகளில் எங்குமில்லாத வேகத்தையும் ஒளியையும் காண்கிறோம். கவி உறுப்புக்க ளான எதுகை மோனைகள் அவ்வேகத்திற்கும் ஒளிக்கும் அழுத்தங்கொடுத்து அற்புத மாக உருவாக்குகின்றன. கவி ஒவ்வொன்றும் அற்புதமான கதியோடும் வேகத்தோ டும் நடனம் ஆடுகின்றன. ஆசிரியர் சண்முகசுந்தரம் ஒவ்வொரு பாடலிலுமுள்ள இந்நயங்களை ஆங்காங்கு விளக்கிக் கொண்டே பொருள் கூறுகிறார். உலகிலுள்ள பொருள்கள் யாவும் பரம்பொருளின் ஆனந்தநடனமே என்ற மூலரின் பரந்த கருத்தை மனத்திற்கொண்டு இந்த ஆனந்த நடனத்தை விளக்கும் பாடல்களை நன்கு பொறுத்தியுள்ளார். இந்த 86 பாட்டுகளையும் ஆசிரியரின் விளக்கத்தோடு கற்று விட்டால் திருமூலர் திருமந்திரம் முழுவதையும் எளிதில் கற்றுவிடலாம். விளக்க உரையாசிரியர் மேற் கொண்டு வெற்றிகரமாக நிறைவேற்றியுள்ள இப்பணியைத் தமிழ் பெருமக்கள் பாராட்டுவது திண்ணம்.

**-- மித்திரன்**

The learned author has culled 86 stanzas from the immortal work Thirumandiram of Thirumoolar and has given his intrepretations of them in lucid and vigorous language. He compares Thirumular's poetry to an ecstatic dance which by its arrangement of words, illustrations and figures of speech expresses deep emotions and expounds great truths. He gives suggestive headings to groups of stanzas with similar teachings and writes annotatory introductions to each stanza with suitable stories or other aids for understanding the hidden meanings in the stanza and writes short notes explaining difficult phrases. The main purport of the book is to explain the nature of the soul and its relationship with the All-self. The editor describes how Tamil genius has enabled its poets to clothe mystical experiences in poetry. The book is thus a beautiful introduction to this great book of mystical knowledge.

**- The Hindu**